# வாசகர்களின் கவனத்திற்கு

இந்த ஆண்டு டிசம்பர் இதழோடு விஜயத்திற்கு 60 ஆண்டு நிறைவு பெறுகிறது. 60-ஆவது ஆண்டு நிறைவை முன்னிட்டு ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் மணி விழா மலராக வெளிவருவதைப் பற்றிய அறிவிப்பைச் சென்ற இதழில் குறிப்பிட்டிருந்தோம்.

இப்போது மணி விழா மலர் பற்றிய இறுதி முடிவு வருமாறு:—

''மணிவிழா மலரை விஜயத்தின் சாதாரண மாத இதழ்களுள் ஒன்ருகக் கணக்கிடாமல், தனியாகவே ரூ. 10 விலையுள்ள மலராக போடுவது; விருப்பமுள்ள அன்பர்கள் தனியாக ரூ. 10 செலுத்தி வாங்கிக் கொள்ளட்டும்'' என்று சிலர் கருத்துத் தெரிவித்தனர். அவ்விதம் செய்வதாஞல் குறைந்த பிரதிகள் அச்சிட்டாலே போதும் என்பது உண்மைதான் ஆனல் சந்தாதாரர்கள் அனைவராலுமே ரூ 10 தனியாகச் செலுத்தி பெற்றுக்கொள்ள இயலாது. எனவே சந்தாதாரர் அனைவருக்குமே மணிவிழா மலர் கிடைக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் ஜனவரி இதழையும் பிப்ரவரி இதழையும் சேர்த்து மணிவிழா மலராக வெளியிட முடிவு செய்துள்ளோம்.

மணிவிழா மலரில் விளம்பரங்களைத் தவிர்த்துக் கட்டுரைகள் மட்டுமே 120 பக்கங்களுக்கு இடம் பெறும். சந்தாதாரர்கள் மணிவிழா மலருக்கென்று தனியாகக் கட்டணம் ஏதும் செலுத்த வேண்டியதில்லை.

ஆர்ட் பேப்பரில் தெய்வங்களின் வண்ணப்படம் எதையேனும் மணிவிழா மலரில் வெளியிட விருப்பப்படும் அன்பர்கள் அதற்கு உரிய செலவான ரூ. 1,800 ஏற்பதாயின் விஜயத்தின் காரியலாயத்துடன் தொடர்பு கொள்ளலாம்.

ஜனவரி & பிப்ரவரி இதழ்கள் இரண்டும் இணைந்த மணிவிழா மலர், ஜனவரி 15 தேதியில் அதாவது பொங்கல் சமயத்தில் வெளியாகும்.

விஜயத்தின் மணிவிழா மலரில் இடம் பெற விளம்பரங்களைத் தந்தும் சேகரித்தும் உதவும்படி அன்பர்களைக் கேட்டுக்கொள்கிருேம். மணிவிழா மலருக்கென்று நன்கொடையாகவும் பொருளுதவி செய்யலாம்.

1980 டிசம்பர் 31 தேதிக்குள் விளம்பரங்களை 'மேனேஜர், ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயம், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004' என்ற முகவரிக்குக் கிடைக்கச் செய்யக் கோருகிருேம். தாமதமின்றிக் கூடிய விரைவில் விளம்பரங்களை அனுப்பி மணிவிழா மலரை உரிய காலத்தில் வெளியிட ஒத்துழைக்கும்படி அன்பர்களைக் கேட்டுக் கொள்கிருேம்.

**விளம்பரக் கட்டணம்**

| | | |
|---|---|---|
| கலர் பக்கம் — முழுப் பக்கம் | ... ரூ. | 500 |
| கலர் பக்கம் அரைப் பக்கம் | ... ரூ. | 300 |
| முழுப் பக்கம் (உள்ளே | ... ரூ. | 300 |
| அரைப் பக்கம் உள்ளே) | ... ரூ. | 175 |
| கால் பக்கம் (உள்ளே) | ... ரூ. | 100 |

Size : Full Page 8" × 6" Half Page 4" × 6"




# AN APPEAL

**SRI RAMAKRISHNA MISSION**
**ANDHRA PRADESH RELIEF AND**
**REHABILITATION WORK**
**RAJAHMUNDRY-533 104.**

The Ramakrishna Misson Centre at Rajahmundry reminds the general public of the need to rehabitate the unfortunate flood victims of SRIKAKULAM District in Andhra Pradesh. Though the disaster is so vast, yet the Ramakrishna Misson has set about the task of taking up rehabilitation work to the extent it can manage with success and propose to construct nearly 200 houses in brick with R.C.C. s'ab roofing, estimated to cost rupees five thousand each. A generous donation of rupees three lakhs by the doyans of the Andhra screen Sri A. Nageswara Rao and Sri N. T. Rama Rao has been equally generously matched by the understanding and sympathetic Chief Minister of Andhra Pradesh Hon'ble Sri T. Anjaiah by a fortnight grant of a similar sum to The Ramakrishna Mission, Rajahmundry.

The Mission's estimates disclose a short fall of nearly four lakh rupees for the fulfillment of the task undertaken.

By and through this appeal to the public The Ramakrishna Misson seeks generous contributions from not merely those who are materially blessed but from one and all according to their mite. All donations will be acknowledged individually. Donations to The Ramakrishna Mission are exempted from income tax. Donations by way of cheques or drafts to be drawn in favour ef Secretary, Ramakrishna Mission, Andhra Pradeshe, Cyclone & Relief Rehabilitation Fund.

**SWAMI SWATMANANDA,**
*Secretary,*
**Ramakrishna Mission,**
**Andhra Pradesh Relief-Rehabilitation Work,**
**Rajahmundry - 533104.**

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—60 || டிசம்பர் 1980 || இதழ்— 12

## பொருளடக்கம்



## வாசகர்களின் கவனத்திற்கு

விஜயத்தின் அடுத்த இதழ் மணிவிழா மலராகும். மலர் ஜனவரி & பிப்ரவரி இதழ்கள் இரண்டும் சேர்ந்ததாக இருக்கும் விஜயத்தைத் தொடர்ந்து படித்துவரும் அன்பர்களுக்கு மலர் தரம் வாய்ந்ததாகத்தான் இருக்கும் என்பதை விளக்கிச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. அதிக பக்கங்கள் கொண்ட மணிவிழா மலர் விரைவில் செலவழிந்து விடுவதற்கு உரிய வாய்ப்பு அதிகமாகவே இருக்கிறது

எனவே டிசம்பர் இதழோடு சந்தாத்தொகை முடிவுபெறும் அன்பர்கள் விரைவில் தமது சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளக் கோருகிறோம் தாமதமாகப் புதுப்பிக்கும் அன்பர்கள் மணிவிழா மலர் கைவசம் இல்லாவிட்டால் மார்ச் இதழிலிருந்து சந்தாதாரர்களாகப் பதிவு செய்யப்படுவார்கள்.

மலர் ஜனவரி இரண்டாவது வாரத்தில் சந்தாதாரர்களுக்கு அனுப்பப்படும்.

அதிகப் பக்கங்கள் கொண்ட மலரை அதிகப்படியான பிரதிகள் அச்சடித்து வைத்துக்கொள்ளவும் தயக்கமாக இருக்கிறது

மணிவிழா மலரின் தனிப்பிரதி விலை ரூ 4. பத்திரிகை விற்பனையாளர்கள் டிசம்பர் 20 ஆம் தேதிக்குள் தங்களுக்குத் தேவைப்படும் பிரதிகளின் எண்ணிக்கையைக் குறிப்பிட்டு விஜயம் காரியாலயத்திற்குத் தகவல் தெரிவிக்கக் கோருகிறோம்.

நிர்வாகி

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்**



# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்


| தொகுதி 60 | ரௌத்திரி ஹூ மார்கழி மீ | இதழ் 12 |
|---|---|---|





அநாகத - அநந்தகால - ஸமீக்ஷயாபி அத்ருஷ்ட
ஸந்தாரோபாய:, நிகில - ஜந்துஜாத - சரண்ய !
ஸ்ரீமந்நாராயண ! தவ சரணாரவிந்த - யுகளம்
சரணம் அஹம் ப்ரபத்யே

—ஸ்ரீ ராமானுஜரின் ஸ்ரீரங்க கத்யம்

உயிரனைத்துக்கும் புகலாக விளங்கிக் காக்கும் தெய்வமே! ஸ்ரீமந்நாராயணனே! வருங்காலமத்தனைக்கும் முடிவற்ற காலம் முழுவதற்கும் சிந்தித்துச் சிந்தித்து, இந்தக் கர்மத்தளையினின்று விடுவித்துக்கொள்ளும் வழியேதும் அறியாத நான் உமது திருவடித் தாமரையிணையில் சரணமடைந்து, என்னை ரட்சிக்கும் பொறுப்பை சமர்ப்பிக்கிறேன்.

வாடினேன்; வாடி வருந்தினேன், மனத்தால்
பெருந்துயர் இடும்பையிற் பிறந்து
கூடினேன்; கூடி இளையவர் தம்மோடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன்; உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன்; நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

— திருமங்கையாழ்வார்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**செவ்வாய்க்கிழமை, ஜூன் 5, 1883**

நேரம் மாலை ஐந்து மணி இருக்கும். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது அறையை அடுத்த தாழ்வாரத்தின் படிக்கட்டில் அமர்ந்திருந்தார். ராக்கால், ஹாஸ்ரா, ம— ஆகியோர் அவரருகில் உட்கார்ந்திருந்தார்கள்.

ஹாஸ்ராவின் மனநிலை 'ஸோஹம்—நான் அவனே' என்ற தத்துவத்தை ஆதரிப்பதாக இருந்தது. அதாவது அவர் வேதாந்த மனப்போக்குக் கொண்டிருந்தார்.

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்** (ஹாஸ்ராவிடம்): ஆம், இறைவனே அஸ்திகன், அவனே நாஸ்திகன் ; அவனே நல்லவன், அவனே கெட்டவன் ; அவனே சத்பொருள், அவனே அசத்பொருள் ; உறக்கம், விழிப்பு ஆகிய நிலைகளிலும் அவனே இருந்துகொண்டிருக்கிறான் ; அது மட்டுமல்ல, விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம், துரீயம்' துரீயாதீதம் போன்ற எல்லா நிலைகளையும் கடந்து அப்பாற்பட்டவனாகவும் இருப்பவன் அவன்தான் — என்ற உண்மைகளையெல்லாம் ஒருவர் தாமே அனுபூதியில் உணர்ந்துகொள்வாரேயானால் அவரது வாழ்க்கையின் எல்லாக் குழப்பங்களும் தீர்ந்துபோய்விடும்.

ஒரு குடியானவனுக்கு வயதான காலத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. பெற்றோரின் மிகுந்த கவனத்தோடும் பரிவோடும் அந்தக் குழந்தை வளர்ந்து வந்தான். ஒரு நாள் குடியானவன் வயலில் வேலை செய்து கொண்டிருந்தான். அப்போது ஓர் ஆள் வந்து அவன் மகனுக்குக் கடுமையான நோய் கண்டு இறந்துபோகும் தறுவாயில் இருப்பதாகத் தகவல் தெரிவித்தான். குடியானவன் வீட்டிற்கு வந்து பார்த்தபோது மகன் இறந்துகிடந்தான். குடியானவனுடைய மனைவி பரிதாபமாக விம்மி விம்மி அழுது புலம்பினாள். ஆனால் குடியானவனின் கண்களிலோ ஒரு சொட்டுக் கண்ணீரும் வரவில்லை.

குடியானவனின் மனைவி அண்டை வீட்டாரிடம் மிகுந்த துக்கத்தோடு, "எப்படிப்பட்ட அருமையான மகன் இறந்து போய்விட்டான் ! ஆனால் இவர் கண்களில் சொட்டுக் கண்ணீரும் வரவில்லையே !" என்று சொல்லி அழுதாள்.

நீண்ட நேரத்திற்குப் பிறகு குடியானவன் மனைவியைக் கூப்பிட்டு, "நான் ஏன் அழவில்லை என்று உனக்குத் தெரியுமா ? நான் நேற்றிரவு ஒரு கனவு கண்டேன். அந்தக் கனவில் நான் ஓர் அரசனாகவும் ஏழு பிள்ளைகளுக்குத் தகப்பனாகவும் இருந்தேன். அந்தக் குழந்தைகள் அத்தனை பேருமே அழகிலும் குணத்திலும் ஒழுக்கத்திலும் மிகவும் சிறந்தவர்களாக இருக்கக் கண்டேன்.

"நாளடைவில் அவர்கள் பெரியவர்களாக வளர்ந்து அறிவாற்றலிலும் பலவேறு கலைகளிலும் சிறந்து விளங்கினார்கள். இந்த நேரத்தில் தூக்கம் கலைந்துவிட்டது. இப்போது நான், உன்னுடைய ஒரு குழந்தைக்காக அழுவதா ? அல்லது என்னுடைய அந்த ஏழு குழந்தைகளுக்காக அழுவதா

என்பது புரியாமல் திகைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று தெரிவித்தான்.

ஞானிகளுக்குக் கனவுநிலை எப்படிப் பொய்யானதோ அந்த அளவுக்கு விழிப்பு நிலையும் பொய்யானது. கடவுள் ஒருவரே கர்த்தா ஆவார். அவரது விருப்பப்படியே எல்லாம் நடைபெறுகிறது.

ஹாஸ்ரா : ஆனால் இதை உணர்ந்து கொள்வது மிகவும் கடினம். உதாரணமாக, பூகைலாஸ் சாதுவின் விஷயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். மக்கள் அவருக்கு எவ்வளவு கஷ்டங்களைக் கொடுத்தார்கள்! ஏன், ஒருவிதத்தில் மக்கள் அவரைச் சித்திர வதை செய்தே கொன்றுவிட்டார்கள் என்று கூடச் சொல்லலாம். அவர் தம்மையும் உலகையும் மறந்து ஆழ்ந்த சமாதி நிலையில் இருந்ததை மக்கள் கண்டார்கள். அந்த நிலையில் முதலில் அவரைப் பூமிக்குள் பள்ளம் தோண்டிப் புதைத்துவிட்டார்கள்; பிறகு அவரைக் கொண்டுபோய்த் தண்ணீரில் போட்டு மூழ்க அடித்தார்கள்; இவை தவிரவும் சில சமயங்களில் அவரை அடித்தும், வேறு சில சமயங்களில் காய்ச்சிய சூட்டுக்கோல் கொண்டு அவரது உடலில் சூடு போட்டும் அவரைத் துன்புறுத்தினார்கள். இவ்விதமெல்லாம் செய்து மக்கள் அவருக்கு உலகைப் பற்றிய உணர்வு உண்டாகும்படி செய்தார்கள். ஆனால், இப்படிப்பட்ட சித்திரவதை காரணமாக முடிவில் அந்தச் சாது இறந்து போய்விட்டார். நீங்கள் சொல்வது போல முடிவில் பகவானது இச்சைப்படிதான் அவர் இறந்து போனார் என்பது உண்மையானாலும், மக்களால் அவர் சித்திரவதைகளுககு உட்படுத்தப் பட்டார் என்பதில் சந்தேகமே இல்லை.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் : மனிதன் தன் கர்ம வினைக்கு ஏற்பப் பலனை அனுபவித்தே தீர்கக வேண்டும். ஆனால் பூகைலாஸ் சாதுவின் விஷயத்தைப் பொறுத்தமட்டில் அவரது மரணம் பகவானின் இச்சைப்படி தான் நிகழ்ந்தது. கவிராஜ் எனபபடும் வைத்தியர் ஒருவர் கண்ணாடிப் புட்டிக்குள் 'மகரத்வஜம்' என்ற மருந்தைத் தயாரிக்கிறார். அந்தப் புட்டியின நான்கு புறமும் களிமண்ணை அப்பி அதை நெருப்பில் வைத்து உஷ்ணப்படுத்துகிறார். அப்போது அந்தப் புட்டியின் உள்ளே இருக்கும் தங்கம் நெருப்பின் உஷ்ணத்தால் உருகி புட்டியில் போட்டிருக்கும் மற்ற மூலிகைகளோடு ஒன்று கலந்து மகரத்வஜம் என்ற மருந்தாக ஆகிறது. பிறகு கவிராஜர் புட்டியை வெளியே எடுத்து அதை மெல்ல மெல்ல உடைத்து, அதனுள் இருக்கும் மகரத்வஜத்தை எடுத்துவைத்துக் கொள்கிறார். அப்புறம் புட்டி இருந்தால்தான் என்ன? உடைந்து போனால்தான் என்ன?

அதுபோல, சாதாரண மக்கள் சாதுவை அடித்துக் கொன்றுவிட்டார்கள் என்று நினைக்கக்கூடும். ஆனால் அவருக்கு உள்ளே இருந்த உட்சத்து பக்குவமடைந்து தயாராகி இருக்கலாம். அதாவது அவருக்குப் பகவானைத் தரிசித்த பரிபக்குவம் ஏற்பட்டிருக்கலாம். பகவானின் சாட்சாத்காரம் கிடைத்த பின்பு அவருடைய உடல் இருந்தால்தான் என்ன, அல்லது அழிந்து போய்விட்டால் தான் என்ன?

பூகைலாஸ் சாது சமாதியில்தான் இருந்தார். சமாதியில் பல வகையான சமாதிகள் உள்ளன. ஒரு சமயம் ரிஷிகேசத்தைச் சேர்ந்த மிகப் பெரிய சாது ஒருவர் இந்தக் கோவிலுக்கு வநதிருந்தார். அவர் சமாதியைப்பற்றித் தெரிவித்தகருத்துக்களெல்லாம் என் சொந்த ஆன்மிக அனுபவங்களுடன் ஒத்திருந்தன.

சமாதி நிலையில் சில சமயங்களில் எனக்குள் இருக்கும் குண்டலினிசக்தி எறும்பைப்போல ஊர்ந்து மேலே செல்வதாக உணர்கிறேன். மற்றும் சில சமயங்களில் அந்தச் சக்தி, குரங்கு ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்குத் தாவிச் செல்வதைப் போலக் குதித்து குதித்துச் செல்வதைப் போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்படு

கிறது. மற்றொரு சமயம் மீன் நீரில் நீந்திச் செல்வதுபோல் அது மேலே செல்கிறது. யாருக்கு இந்த ஆன்மிக அனுபவங்கள் ஏற்படுகின்றனவோ அவரால் மட்டும்தான் இந்த ஆன்மிக அனுபவங்கள் எப்படி என்பதை உணர்ந்துகொள்ள முடியும். சமாதியில் ஒருவன் உலகத்தையே மறந்து விடுகிறான். அந்த உயர்ந்த நிலையிலிருந்து என் மனம் சிறிது கீழே இறங்கி வரும்போது, "அம்மா, என்னைச் சரிபடுத்தி அருள்வாயாக. நான் பக்தர்களுடன் பேச வேண்டும்" என்று ஜகன்மாதாவிடம் பிரார்த்தித்துக் கொள்வேன்.

ஈசுவரகோடிகளைத் தவிர மற்றவர்கள் சமாதிநிலையை அடைந்த பிறகு வியவகார நிலைக்குக் கீழே இறங்கி வர முடியாது. சாதாரண மக்களில் சிலர் ஆத்ம சாதனைகளின் மூலம் சமாதிநிலையை அடையலாம்; ஆனால் அவர்களால் மறுபடியும் அந்த நிலையிலிருந்து வியவகார நிலைக்குக் கீழே இறங்கி வர முடியாது. ஆனால் கடவுள் மனித வடிவில் அவதார புருஷராக வரும்பொழுது மக்களுக்கு முக்தியைத் தரும் சாவியை தமது கையில் வைத்திருக்கிறார். ஆதலால் அவர் மனித குலத்தின் நன்மைக்காகச் சமாதி அடைந்த பிறகும் அதிலிருந்து வியவகார நிலைக்குக் கீழே இறங்கி வருகிறார்.

ம — (தமக்குள்): மனிதர்களின் முக்திக்கு உரிய சாவியைக் குருதேவர் தமது கையில் வைத்திருக்கிறாரா?

ஹாஸ்ரா: வாழ்க்கையில் மனிதன் செய்ய வேண்டிய மிகவும் முக்கியமான ஒரே ஒரு காரியம் பகவானைத் திருப்திப்படுத்துவது தான். கடவுள் அவதாரபுருஷராக வந்தால் என்ன அல்லது வராமற் போனால்தான் என்ன?

ஸ்ரீராமகிருஷ்ணர் (புன்சிரிப்புடன்): ஆமாம், ஆமாம். விஷ்ணுபூரில் பத்திரங்களைப் பதிவு செய்யும் பெரிய ரிஜிஸ்டர் ஆபீஸ் இருக்கிறது. அங்கே பத்திரத்தைப் பதிவு செய்தாலே போதும். அதற்கு மேல் சிறிய கிராமத்தில் பதிவு செய்ய வேண்டிய அவசியம் இல்லை.

---

# நீ சொன்ன சொல்லினும் உளன்

"இறைவன் ஒருசாண் இடத்திலும் இருக்கிறான். அணுவை நூறு பாகமாக வைத்த கோணிலும் (துகளிலும்) இருக்கிறான். உலகத்திலே பெரிய மலை என்று சொல்லும் மேரு மலையிலும் நிறைந்திருக்கிறான். இதோ உன் பக்கத்தில் தூண் இருக்கிறதே, அதிலும் இருக்கிறான். இதோடு நிற்கவில்லை; கடவுளாவது, ஒன்றாவது என்று நீ சொன்னாயே, அந்தச் சொல்லுக்குள்ளும் அவன் ஒளிந்துகொண்டிருக்கிறான். 'இல்லை' என்று சொன்னது நீயா இல்லை; இறைவன் உன் வேஷத்தில் நின்றுகொண்டு சொன்ன வார்த்தைதான். 'நீ' என்று ஒருவனே இல்லையே" என்று பிறவி ஞானியான பிரகலாதன் சொன்னான்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த இரணியன். "பலே, பலே! இந்தச் சின்னப் பயலுக்கு இவ்வளவு வேதாந்தமா!" என்று ஏளனத்தோடு சிரிக்கிறான். வருகிறது கம்பன் பாட்டு :—

"சாணினும் உளன் ஓர்தன்மை
அணுவினைச் சதகூறிட்ட
கோணினும் உளன்; மாமேருக்
குன்றினும் உளன் இந்நின்ற
தூணினும் உளன், நீ சொன்ன
சொல்லினும் உளன்; இத்தன்மை
காணுதி விரைவின்" என்றான் :—
நன்றெனக் கனகன்நக் கான்.

# ஆசையும் துறவும்

சுவாமி விஞ்ஞானனந்தர்

கடவுள் எங்கும் நிறைந்தவர். எல்லா வகையான ஆற்றலும் கொண்டவர் இதை நன்ருக நினைவில்கொள். அவரால் அளிக்க முடியாதது இந்த உலகத்தில் எதுவுமே இல்லை. அவரிடமிருந்து எதை எதை மக்கள் கேட்கிருர்களோ, அவைகளையெல்லாம் ஒரு வேலைக்காரனைப்போல் அவர் கொண்டு வந்து தருகிருர். அவரே மனம் உவந்து தமது விருப்பமாக நமக்கு எதைக் கொடுக்கிருரோ அதோடு நாம் மனநிறைவு கொள்ள வேண்டும்.

அவரிடம், சிறிது நாட்களில் அழிந்து போகின்ற மிகக் கேவலமான பொருள்களுக்காக ஏன் நாம் பிரார்த்தனை செய்ய வேண்டும்? கடவுளைக் காண்பதற்கு உரிய தூய்மையையும் சுயநலமற்ற தன்மையையும் அடைவதற்கான வலிமையைத் தருமபடி நாம் அவரிடம் பிரார்த்தனை செய்வோம.

எல்லாவிதமான துன்பங்களுக்கும் ஆசை தான் ஆணிவேர். உலகப்பொருள்களிடம் உங்களுக்கு ஆசை இருக்கும் வரையில் மனத்திருப்தி என்பதே உங்களுக்கு ஏற்படாது. இந்த ஆசைகள் நீங்கியதும் நீங்கள் விடுதலைப் பெற்று ஆனந்தமயமாகி விடுவீர்கள்.

இறந்த பிறகுகூட மிக மிக நுட்பமான வடிவில் ஆசை தங்கி இருக்கிறது. சாவு தசை, எலும்பு முதலியவைகளால் ஆகிய ஸ்தூல உடலை மட்டுமே அழிக்கிறது ஆனல் புலன் உணர்வுகளும்* மனமும் புத்தியும்‡ மிக நுட்பமான வடிவில் நுண்ணிய உடம்பில் தங்கி இருக்கின்றன அந்த நுட்பமான உடமபில் புலன்களின் ஆசைகள் அடக்க முடியாதவையாக இருக்கும் இந்த நுட்பமான உடல அழிந்தபிறகு, அதைக் காட்டிலும நுட்பமான, பலவேறு உடம்புகளுக்கும காரணமான 'காரண உடம்பு' தோன்றுகிறது. அந்த உடம்பிலும்கூட, மனமும புத்தியும் மற்ற எல்லாமுமே, உயிர்கள் விதைக்குள் மறைந்திருப்பதுபோல் உள்ளடங்கி இருக்கின்றன. காரண உடம்பிற்கு அப்பால் மனம் புத்தி இவைகளையெல்லாம கடந்து உண்டாகும மனம் கடந்த உடம்பில் தான், ஒருவன் முழுமையான ஆன்மிக ஒளியைப் பெறுகிருன். எனவே உடம்பின் புறவாழ்வின வளர்ச்சியை மட்டும் நாடுவது போதுமானதாகாது எது தேவையானது என்ருல உடம்பு-புற உலகம, உள்ளம் ஆத்மா முதலிய முற்றிலுமான எல்லா வகையான வளர்ச்சியுமாகும்.

ஆசைதான் பிறவிக்கே காரணம் நீங்கள் உங்களுடைய எல்லா ஆசைகளிலிருந்தும் விடுபட்டு விட்டீர்களானல், நீங்கள் மறு பிறவி எடுக்கவே மாட்டீர்கள். உதாரணத்திற்கு, நான் ஒரு பொருளை வேகமாக ஒரு திசையை நோக்கித் தள்ளிவிட்டேன் என்று வைத்துக்கொள்ளுங்கள். அது அந்த வேகம் தீர்கின்ற வரையில் ஓடிக்கொண்டே இருக்கும். அப்படி ஓடும் பொருள் ஓரிடத்தில் மேலும தள்ளப்படவில்லையென்ருல் சிறிது தூரத்திலோ அல்லது அதைக் கடந்து கொஞ்ச தொலைவிலோ அது நிச்சயம் நின்றுவிடும். நமது பிறப்பு, இறப்பாகிய வட்டமும் தொடர்ந்து ஓடிக்கொண்டிருப்பதற்குக் காரணம், நாம் ஒவ்வொரு பிறவியிலும் அது சுற்றுவதற்கான வேகத்தைத் தருவதுதான். ஆனல் அது சுற்றுவதற்கான வேகத்தைத் தராமல் நிறுத்தி விட்டோமானல், அதாவது நாம் நம்முடைய ஆசைகளை விட்டுவிட்டோமானல் நாம் மேற்கொண்டு பிறவிகளை எடுக்கவே மாட்டோம்.

சமய உலகில் துறவு என்பது இல்லாமல் நம்மால் எதையுமே சாதிக்க முடியாது. ஒவ்வொன்றையுமே நாம் துறந்துவிட முயற்சி செய்ய வேண்டும்.

கடவுளே இப்போது நேரில் வந்து நம்மீது தெய்விக அமைதியையும் இன்பத்தையும் பொழிகிருர் என்ருலும், நாம் அவரை வரவேற்கவோ அல்லது அவர் தரும் அமைதியையும், ஆனந்தத்தையும் ஏற்றுக்கொள்ளவோ மாட்டோம். இது ஏனென்ருல் அவர் நம்மிடம துறவியின் முழுமையான வடிவமாக வருகிருர்; நம்மிடம இருக்கும் ஆசைகள் அத்தனையையும், நம்முடைய உலகச் சொத்துக்கள் அத்தனையும் அது மட்டும் அல்லாமல் 'நம்முடையது' என்று எவற்றையெல்லாம் அழைக்கிருேமோ, அவைகள் அனைத்தையும் அவர் நம்மிடமிருந்து விலக்கவும், நம்மையே நம்மிடமிருந்து தியாகம் செய்ய வைக்கவும அவர் வருகிருர். நம்மிடையே மிகமிகச் சிலர் தான் எல்லாவற்றையும் துறந்துவிடத் தங்களைத் தயார் செய்து கொண்டிருக்கிருர்கள். கடவுள் தருகிற எல்லையற்றச் சொத்துக்களைவிட, நிலையில்லாமல் அழிந்து போகிற உலகப்பொருள்களைத்தான் மிக அதிகமாக விரும்புகிருேம்.

இந்த உலகத்தில் துறவைப் போன்று உயர்ந்ததும் உன்னதமானதும் எதுவும் இல்லை.

---

*மெய், வாய், கண், மூக்கு, செவி இவைகளின் வழியாக உலகப்பொருள்களை அனுபவிக்க விரும்பும் ஆர்வம்.

‡ நல்லது, கெட்டதைக கண்டறியும் தன்மை.



# கவி வேமண்ணுவின் விவேக மொழிகள்

எம். நாகசுப்ரமண்யம்

1 உலகமெங்கும் வருந்தித் தேடினுலும் நற்குணமுடைய மேலோரைக் காண்பது அரிது. பொல்லார்க்கோ அளவில்லை; இது சகஜம்.

எப்படியென்ருல், மண்ணைப்போல் பொன் சுலபத்தில் கிடைக்கிறதா? இல்லையே. அது போல்தான் என்று அறிதல் வேண்டும்

2. தூண்டிலில் வைத்த இரைக்கு ஆசைப் பட்டு மீன்கள் தம் உயிரை இழக்கின்றன.

அதுபோல, உலகத்தில் மனிதர்கள், ஆசையானது பேய் போலப் பிடித்து அலைத் தலினுலே தமது நல்லறிவு கெட்டு, அந்த ஆசைகளுக்கு உள்ளாகித் தீவினைகளைச் செய்து நாசமடைகின்றனர்.

3. செருப்புக்குள்ளே கல்லும், செவிக் குள்ளே ஈயும், காலில் முள்ளும், வீட்டில் கலகமும் எத்தனை அளவிற் சிறியதாக இருந் தாலும் விசேஷத் துன்பத்தைத் தருவன வாகும்.

4 பார்த்தவர் தன்னை வியக்கும்படி அநேக விலையுயர்ந்த ஆபரணங்களைப் பூண்டு உடம்பை அலங்கரித்துக்கொண்டு தனக்குச் சமானம் ஒருவருமில்லை என்று சந்தோஷப்படும் அறிவில்லாத மூடன், தன உண்மையான உருவம் இன்னதென்று தெரியாமையால் அல்லவா இப்படிச் செய் கிருன். தெரிந்தால் மகிழ்வானு?

5. நீரைப் பிரித்து பாலையுண்ணும் விந்தை அன்னப் பட்சிக்கல்லாமல் வேருென் றுக்குத் தெரியுமோ? தெரியாது அல்லவா!

அதுபோல கர்த்தாவாகிய ஈசனையும் காரியமாகிய பிரபஞ்சத்தையும் ஞானிகள் விவேகித்து அறிவார்களேயன்றி, அஞ் ஞானிகள் அறியமாட்டார்கள்.

6. உப்பும் கர்ப்பூரமும் பார்க்க ஒன்று போல் இருக்கின்றன. சுவைத்தால் அவற் றின் ருசி தெரிந்துவிடுகிறது. அதுபோல, நல்லவர்களையும் தீயவர்களையும் பழகிப் புரிந்து கொள்ளலாம்.

7. செல்வமுடையவன் இழிகுலத்துதித்த குரூபியானுலும் உயர்குலத்தில் பிறந்த மன்மத லட்சணமுள்ளவன் என்று அவனைப் புகழ்வார்கள்.

செல்வமில்லாமல் வறுமைத் துன்பமடைந் தவனை உயர்குலத்தானுயிலும், அழகிற் சிறந்த மன்மதனுயினும் புலையனை வெறுத்தல் போல் வெறுப்பார்கள்.

8. கடன் வாங்குவதும், மூடர்களோடு சிநேகம் செய்வதும், பொய் பேசுவதும், அடகு வைத்தலும் துன்பத்துக்கு ஏதுவாகும்.

9. அற்ப ஜனங்களுக்கு மேன்மையான அதிகாரத்தைக் கொடுத்தால், அவர்கள் மேன்மக்களது பெருமையை அறியாமல் வெறுத்து ஹிம்சை செய்து துரத்தி விடுவார்கள்.

செருப்புத் தோலைக் கடித்து மகிழும் நாய்க்குக் கருப்பஞ்சாற்றின் சாதுரியத்தைத் தெரிந்துகொள்ளக் கூடுமோ?

10 இரப்பவருக்கு ஒன்றைக் கொடாமல் சேர்த்து வைக்கும் உலோபிகள் உயிரோடு இருத்தலினுல் உண்டாகும் பிரயோசனம் யாது? உயிர்விட்டு இறந்து போதலினுல் உண்டாகும் நஷ்டமென்ன? இரண்டும் இல்லை.

புற்றினுள் வாழ்கிற கறையான் பிறந்து விருத்தியானுல்தான் என்ன? இறந்து மடிந் தால்தான் என்ன?

11. பிறரை வஞ்சித்து அவர் பொருளைக் கவர்ந்து மதங்கொண்டு வாழ்ந்திடுதல் பெருமையாகாது. நன் முயற்சியால் பொரு ளைத் தேடிக் கடன்படாமல் வாழ்தலே பெருமையாகும்.



# அன்னையின் அறிவுரைகள்

அ. லெ. நடராஜன்

லௌகிக வாழ்வில் வெற்றிபெற விரும்பினும், அல்லது ஆன்மிக வாழ்வில் வெற்றி பெற விரும்பினும் சரி, அதை இளமையிலிருந்தே தொடங்க வேண்டும். தவம் செய்தல், தியானம் செய்தல், யாத்திரை செய்தல், பணம் சம்பாதித்தல், பூசை செய்தல் ஆகியவற்றை வாலிபப் பருவத்திலேயே செய்வது நலம் பயக்கும் என்பது ஸ்ரீ அன்னையாரின் கருத்தாகும். அதைப் பின்வருமாறு அன்னை தெரிவித்துள்ளார் :—

''தவம், பூசை, யாத்திரை, பணம் தேடுதல் ஆகிய இவை அனைத்தையும் இளமையிலேயே செய்து முடித்துவிட வேண்டும். எனது இளமைப் பருவத்தில் நடந்து சென்று காசி, பிருந்தாவனம் முதலிய தலங்களைத் தரிசித்துள்ளேன். இப்போது எனக்கு வயதாகிவிட்டதனுல், இரண்டடிகூட எடுத்து வைத்து என்னுல் நடக்க முடியவில்லை. பல்லக்கில் பயணம் செய்ய வேண்டியிருக்கிறது. முதுமையில் உடல்வலிமை குன்றிவிடுவதனுல், மற்றவர்களைச் சார்ந்தே வாழ்க்கையை நடத்த வேண்டியிருக்கிறது. முதுமையில் மனதும் தன் வீரியத்தை இழந்துவிடுகிறது.''

பக்தர்களும் சீடர்களும் ஸ்ரீ அன்னையாருக்குக் கடிதம் எழுதித் தங்களுக்குள்ள ஐயத்தை அகற்றிக் கொள்வது உண்டு. தங்களால் மனதை ஒரே நிலையில் நிற்கச் செய்ய இயலவில்லை என்றும், என்ன செய்தால் சித்தம் ஒரு நிலையில் ஒன்றி நிற்கும் என்றும் கேட்டுப் பலர் எழுதியிருந்தார்கள்.

''தினந்தோறும் பதினையாயிரம் அல்லது இருபதினுயிரம் தடவை பகவானுடைய நாமத்தை உச்சரித்தால், மனம் ஸ்திரப்படும். உண்மையிலேயே இது நிகழக் கூடியது தான். இதை நான் என் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். அப்பியசித்துப் பார்க்காமல் குறை கூறலாகாது'' என்று அன்னையார் கூறினர்.

சீடர் : யோகாசனம், பிராணுயாமம் ஆகியவற்றை அப்பியசிப்பதனுல் நன்மை உண்டா ?

அன்னையார் : இத்தகைய அப்பியாசங்களால் சில சித்திகள் கிட்டுகின்றன. இந்தச் சித்திகள் மோட்ச நிலையினின்று மாந்தரை நழுவச் செய்துவிடுகின்றன.

ஜபம் என்பது மனதை ஒருநிலைப்படுத்தும் பொருட்டு மேற்கொள்ளும் பயிற்சி ஆகும். தியானம் என்பது மனதை ஒருநிலையில் நிறுத்துவது ஆகும். ஜபம் முதற்படி ; தியானம் இரண்டாவது படி. தியானத்தைத் தொடர்ந்து செய்ய இயலாதவர்கள், ஜபத்தை ஒழுங்காகச் செய்வது அவசியம் ஆகும். இது குறித்த உரையாடல் வருமாறு :

சீடர் : மனம் ஸ்திரப்படாமல் இருக்கக் காரணம் என்ன ? இறைவனைப் பற்றிச் சிந்திக்க முயலும்பொழுது, மனதின் நாட்டம் மற்ற விஷயங்களில் செல்லுவது ஏன் ?

அன்னை : நாம் எந்தத் தொழிலில் ஈடுபட்டு உள்ளோமோ, அதைப் பற்றிய

நினைப்பு மனதில் இருப்பது இயல்பு. தியானம் புரிய இயலாமற் போனால், ஜபம் செய்வதில் நாட்டத்தைச் செலுத்துவீராக. தியானம் செய்வதில் மனம் திடப்பட்டுவிடு மானால் அது மிகவும் நல்லது. இயலாது போனால் மனதைப் பலவந்தமாகத் தியானத்தில் செலுத்தலாகாது.

''மனம் சஞ்சலமுற்றே அலைகிறது ; அதை ஸ்திரமான நிலையில் வைத்துக்கொள்ள இயல வில்லை. எதைச் செய்வதன் மூலம் மனதை ஒரு ஸ்திரநிலைக்குக் கொணரலாம் ?'' என்று சீடர் ஒருவர் ஸ்ரீ அன்னையாரிடம் கேட்டார்.

அவருக்கு அன்னை பின்வருமாறு பதில் சொன்னார் : ''காற்று மேகத்தை ஒதுக்கித் தள்ளுவதைப் போல, இறைவனுடைய நாமத்தை ஜபிப்பது, உலகப்பற்றை ஓட்டி விடுகிறது.''

''ஜபம் செய்வதற்கு உரிய நேரம் எது ?'' என்று பக்தர் ஒருவர் அன்னையிடம் வினவினர்.

''அதிகாலையிலும் அந்திமாலையிலும் ஜபம் செய்வதற்கு உரிய நல்ல நேரம் ஆகும்'' என்று அன்னையார் பதில் சொன்னர்.

''ஜபம் செய்யும்போது எண்ணிக்கையில் அதிகக் கவனம் செலுத்தாமல், பகவானுடைய நாமத்தை மனம் தோய்ந்து உச்சரிப்பது அவசியம்'' என்று அன்னையார் கூறியுள்ளார்.

ஒரு சீடர் ஜபத்தின் எண்ணிக்கை குறித்து அன்னையாரிடம், ''தாயே ! இவ்வளவு ஜபம் செய்து முடிக்க வேண்டும் என்ற உறுதியுடன் ஜபம் செய்ய உட்காருவது அவசியமா ?'' என்று கேட்டார்.

அதற்கு அன்னையார், ''எண்ணிக்கையை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு நீ ஜபம் செய்ய முற்பட்டால், உனது எண்ணம் முழுவதும் எண்ணிக்கையிலேயே குவிந்து விடும். எண்ணிக்கையில் அதிக அக்கரை கொள்ளாமல், இறைவன் நாமத்தை உச்சரிப்பதில் அதிக அக்கரை கொள்ள வேண்டும்'' என்று பதில் சொன்னர்.

''இறைவன் தூய்மையானவன் ; அவனை அடைய மனத்தூய்மை மிகமிக அவசியம் ஆகும். அதிகத் தவம் செய்வதன் மூலமே ஒருவன் மனத்தூய்மையைப் பெற முடியும்'' என்று அன்னையார் தெரிவித்திருக்கிறர்.

---



நண்பர்களிடம் மட்டுமின்றிப் பகைவனிடமும் நேசம் கொள். நீ நடக்கும் வழியில் முள்ளைப் போடுபவன் முன் நீ பூவை வை.

—கிறிஸ்தவம்

மரத்தை அசைவித்தால் அதன் நிழல் எல்லாம் அசையும். அதுபோல், ஈசன் ஆட்டுவித்தால் இவ்வுலகமெல்லாம் அவன் வழி யாடா நிற்கும்.

—ஞான ரத்னவெளி.

சாதாரணப் பொருள்கள் மண்ணாலும் தண்ணீராலும் சுத்தமாகின்றன. தரை பெருக்குவதாலும், மெழுகுவதாலும் தண்ணீரைத் தெளிப்பதாலும் சேட்டனிடுவதாலும் சுத்தமுள்ளதாக ஆகிறது. ஆறு வேசுத்தால் சுத்தமாகிறது. ஆனல் மனமோ ! உண்மை பேசுவதால் சுத்தமாகிறது.

—தர்மஸாரம்

# நம்மாழ்வார் செய்யும் விண்ணப்பம்

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

### முன்னுரை

எம்பெருமான் ஆழ்வார்க்கு மயர்வற மதி நலம் அருளினன். அதுகொண்டு ஆழ்வார் தம்முடைய ஞானக்கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்குகிறார். நோக்க நோக்க, அவனைப் பிரிவறக் கலந்து அநுபவிக்கப் பெறவேண்டும் என்னும் ஆராக் காதல், அவருக்கு மிகுதிப்படுகிறது. ஆனால் அத்தகைய இனிய அநுபவத்திற்குத் தடைகள் மூன்று இருப்பதை அவர் உணர்கிறார்.

1. அவற்றுள் முதலாவது தடை — பொய்ந்நின்ற ஞானம்; அதாவது தத்துவ ஞானத்திற்கு மாறான விபரீத ஞானம். நல்வினை தீவினைகள் உண்டு, சுவர்க்க நரகங்கள் உண்டு. இம்மை மறுமை உண்டு, இறைவன் உண்டு என்று உணரப் பெறுவது தத்துவஞானம். நல்வினை தீவினைகள் இல்லை, இறைவன் இல்லை என்று பிறழ உணர்ந்து துணிந்து கூறுவது விபரீத ஞானம். தத்துவஞானம் மெய்யுணர்வு என்றும், விபரீத ஞானம் திரிபுணர்வு என்றும் கூறப் பெறும்.

2. இரண்டாவது தடை — பொல்லா ஒழுக்கம். இறைவன் ஒருவன் உளன் என்று உணர்ந்து, 'யானே நீ என்னுடைமையும் நீயே' என அவனை வழிபட்டு ஒழுகுதல், நல்லொழுக்கு. அதற்கு மாறாக, இறையுணர்வு என்பது சிறிதும் இன்றி, யான் என்னும் அகப் பற்றும் எனது என்னும் புறப் பற்றும் ஆகிய அகங்கார மமகாரங்கள் மேலிட்டு, அவற்றின் வழியே இறைவனை மறந்து ஊனே உடையே உகந்து ஒடியுழலுதல், பொல்லா ஒழுக்கம்.

3. மூன்றுவது தடை — அழுக்கு உடம்பு. பொய்ந்நின்ற ஞானத்திற்கும், பொல்லா ஒழுக்கத்திற்கும் அடிப்படைக் காரணமாக அமைந்திருப்பது அசுத்தமான நோக்கத்துடன் கூடியிருக்கும் சம்பந்தமேயாகும். உடம்பு அழுக்கினின்று பிறந்தது; அழுக்குகளையுடையது; அழுக்குகள் சேர்வதற்குக் காரணமாக இருப்பது. இறைவனிடம் பிரிவறக் கலந்து கூடி இன்புறுவதற்கு அழுக்குடம்பும், பொல்லா ஒழுக்கமும், பொய்ந்நின்ற ஞானமும் ஆகிய இந்த மூன்றும் பெரிய தடைகளாக இருக்கின்றன.

இந்த மூன்றினாலுமே, எல்லாத் துன்பங்களுக்கும் நிலைக்களமான கொடிய பிறவித் துன்பம் ஏற்படுகிறது. இதுகாறும் எத்தனையோ பிறவிகளை எடுத்து எடுத்துத் துன்புற்றாயிற்று. இனிமேலும் பிறவி எடுத்து வருந்துதல் கூடாது என்று கருதி, ஆழ்வார் எம்பெருமானிடம் மிகவும் பணிவுடன் விண்ணப்பம் செய்துகொள்ளுகிறார்!

### உயிர் அளிப்பான் பிறந்தாய்

தமது விண்ணப்பத்தைப் பெருமாள் செவி சாய்த்து கேட்டருளற் பொருட்டு, ஆழ்வார் அவனைப் புகழ்ந்து பாராட்டிப் பேசுகிறார்! எண்ணில்லாத பலப் பல குண நலங்களை யுடையவன் எம்பெருமான். ஆயினும் அவற்றுள் மிக மிகத் தலை சிறந்த குண நலங்கள் இரண்டு. அவையாவன முறையே சௌலப்பியம் (எளிமைத் தன்மை); பரத்

துவம் (ஒப்புயர்வற்ற மேன்மைத் தன்மை). அவை இரண்டையும் இங்கே குறிப்பிட்டு, ஆழ்வார் பேசுகிறார்.

இறைவன் எப்போதும் மூன்று செயல்களைச் செய்தலில் குறியாக இருக்கிறான். நல்லவர்களைப் பாதுகாத்தல்; கொடியவர்களை அழித்தொழித்தல், அறத்தை நிலைநாட்டுதல் என்பனவே அம் மூன்று செயல்கள்.

இவற்றுள் நல்லவர்களைப் பாதுகாத்தலைத்தான், இறைவன் மிகவும் முதன்மையாகக் கருதுகிறான். இந்த ஒன்றில் ஏனைய இரண்டும் அடங்கிவிடும். ஆதலின் நல்லவர்களைப் பாதுகாப்பதற்கென்றே, அவன் மீன் ஆமை கேழல் முதலிய பல வடிவங்களில் வந்து திருவவதரித்தான். நம்மைப்



போல வினைவயப்பட்டு அவன் பிறக்கவில்லை. நல்லவர்களைப் பாதுகாக்க விரும்பிதானே தன் கருத்தின்படி அருள்வயத்தாற் பிறந்தான். அங்ஙனம் பல பிறவிகளில் பல வடிவங்களில் வந்து பிறந்தான். அந்த அந்தப் பிறவிகளில் பிறந்தபோது சிறிதும் வேறுபாடு தோன்றுதபடி, அதனதன் தன்மையாகவே இருந்தான். இங்ஙனமெல்லாம் அவன் செய்தருளியது, உயிர்த் தொகுதிகளைக் காத்தருளுதல் வேண்டும் என்னும் அவனது ஒப்பற்ற அருளியல்பினுலேயே யாகும். ஆதலின், 'உயிர் அளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்' என்று ஆழ்வார் இறைவனின் எளிமைத் தன்மையைப் புகழ்ந்தார்.

### இமையோர் தலைவர்

இறைவன் எளியவன் மட்டும் அல்லன்; மிக மிக அரியவனும் ஆவான். அரியவனுதல் தான், அவனது இயற்கையியல்பு. அதுதான் மேன்மை அல்லது பரத்துவம் எனப்படும். எம்பெருமான் விண்ணுலகிலுள்ள இந்திரன் முதலிய தேவர்களுக்கெல்லாம் தலைவனுகத் திகழ்கிறான். அம்மட்டோ! வைகுந்தமாகிய பரமபத உலகிலுள்ள நித்தியமுக்தர்கள் எல்லோருக்குங்கூட, அவன் தலைவனுக விளங்குகிறான். இவ்விருவர்க்கும் ஒரு சேரத் தலைமைநிலை பெற்று விளங்குதல் பற்றி, 'இமையோர் தலைவா' என்று இனிது புகழ்ந்து, இறைவனை விளிக்கிறார் ஆழ்வார்.

பொய்ந்நின்ற ஞானமும், பொல்லா
  ஒழுக்கும், அழுக்குடம்பும்,
இந்நின்ற நீர்மை இனியாம்
  உருமை, உயிர் அளிப்பான்
எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்!
  இமையோர் தலைவா!
மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன்
  செய்யும் விண்ணப்பமே!

இங்ஙனம் இறைவனை விளித்து, 'நின்னிடம் யான் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ள வந்துள்ளேன்; இதனைச் சிறிது நின்று கேட்டருளல் வேண்டும்' என்கிறார் ஆழ்வார்.

### நுண்பொருட் குறிப்புகள்

இந்த இனிய சிறந்த பாடலில் உள்ள ஒவ்வொரு சொல்லும் சொற்றொடரும் மிகவும் நுண்ணிய சிறந்த கருத்துக்கள் செறிந்து காணப்படுகின்றன. சிந்திக்குந்தோறும் இவை சிந்தனைக்கு விருந்தாய்ச் சிறந்து திகழ்கின்றன ஈண்டுச் சில கருத்துக்கள் மிகவும் சிறப்புடையனவாக விதந்து குறிப்பிடத் தக்கவையாகும்.

1. நாம் பிறவிகளைப் பெறுவதற்கும், இறைவனெடு கூடாமற் பிரிந்திருப்பதற்கும், பொய்ந்நின்ற ஞானம், பொல்லா ஒழுக்கம், அழுக்குடம்பு ஆகிய மூன்றுமே முதன்மையான காரணங்கள்.

2. தண்டகாரணியத்தில் முனிவர்கள் இராமபிரானிடம் சென்று, 'இது ஒரு வெட்டு, இது ஒரு குத்து, இதைப் பார், இதனைக் காண்' என்று, அரக்கர்கள் தமக்குச் செய்த கொடுமைகளைக் கூறித் தம் உடம்பைக் காட்டினாற்போல, ஆழ்வார் எம்பெருமானிடம் தமது ஆத்மாவைக் காட்டி, பொய்ந் நின்ற ஞானம் முதலிய மூன்றையும் சுட்டி, 'இந்நின்ற நீர்மை' என்கிறார் என்று, ஆளவந்தார் அருளிச் செய்வராம்.

3. 'அடியேன் செய்யும் விண்ணப்பம்' என்று குறிப்பிடும் ஆழ்வார், அதற்கு ஏற்ப 'யான் உறுமை' என்று ஒருமையிற் கூறாமல் 'யாம் உறுமை' எனப் பன்மையிற் கூறுகிறார். இது ஆழ்வாரின் தன்னலமற்ற பரநல உணர்வைப் புலப்படுத்துவதாகும். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்பதே பெரியோர் இயல்பாதலை இதனால் நாம் இனிது உணரலாம்.

இந்தச் சொற்றொடர்க்கு 'வியாக்கியானச் சக்கரவர்த்தி' ஆகிய பெரியவாச்சான் பிள்ளை அவர்கள், "பிறர்படும் துன்பம் (பராநர்த்தம்) நெஞ்சிற் படுகையாலே நாட்டுக்காகத் தாம் மன்றாடுகிறார்" என்று அருளியுள்ள சிறப்புரை அறிந்து மகிழற்பாலது.

4. 'பிறவாப் பிறப்பிலை, பிறப்பித்தோரிலையே' எனவும், 'பிறப்பில் பல்பிறவிப் பெருமான்' எனவும் புகழ்ந்தோதப்படும் சிறப்பினனாதலின், இறைவனை 'எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்' என்றார்.

5. கீதையிற் கண்ணபிரான், 'நல்லவர்களைப் பாதுகாப்பதன் பொருட்டு வந்து பிறக்கிறேன்' என்று அருளிச் செய்திருத்தலின், இங்ஙனம் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தமைக்குக் காரணம் கூறுவார், 'உயிர் அளிப்பான் பிறந்தாய்' என்றார்.

6. 'இமையோர்' என்றது கண்களை இமைக்காதவர்கள் என்னும் பொருளில் விண்ணுலகத்தில் உள்ள தேவர்களையும், அகநோக்காகிய ஞானக் கண்களைக் குவியாதவர்கள் என்னும் பொருளில், வைகுந்தத்தில் உள்ள நித்ய முக்தர்களையும் ஒருசேரக் குறிக்கும்.

7. 'இமையோர் தலைவா' என்றது உத்தம புருஷத் தன்மையை உணர்ந்து நினைந்தபடி. இது தென்னத்தியூர் என்னும் காஞ்சீபுரத்தில் உள்ள தேவாதிராசன் ஆகிய பேரருளாளப் பெருமாளையே குறிக்கும். திருவாய்மொழியின் முதற் பாடலிலும் 'அமரர்கள் அதிபதி' என்று ஆழ்வார் இவரையே சுட்டியருளினர்.

8. 'மெய்ந்நின்று' என்பதில் உள்ள 'மெய்' என்பதனை 'விண்ணப்பம்' என்பதனோடு இயைக்கலாம். அங்ஙனம் இன்றி, "உனது திருமேனியைக் காட்டி என்முன் நேரிலே நின்று" எனவும் பொருள் கொள்ளலாம்.

9. இனி 'நின்று' என்பதனைக் கேட்டு என்பதனோடு கூட்டி, 'நின்று கேட்டு' எனவும் ஒரு தொடராக்கிப் பொருள் கொள்ளலாம். "பெருமாள் திருவீதிப் புறப்பாடுகளில் வேதபாராயணம் கேட்க நிற்பதில்லை; அருளிச் செயல் கேட்க நிற்பதுண்டு; ஆழ்வார் இங்ஙனே நின்று 'கேட்டருளாய்' என்று பிரார்த்தித்ததனாலன்றோ இது?" என்று அழகியமணவாளச்சீயர் சுவாமிகள் இதற்கு நயவுரை அருளிச் செய்வராம்.

10. 'கேட்டருளாய்' என்னும் தொடரைக் 'கேட்டு அருளாய்' எனப் பிரிப்பர் சிலர். 'கேட்டுவிட்டு, அதன் பின்னர் அருள் செய்க' என்பது அவர் கருதும் பொருள். அது ஆழ்வார் கருத்துக்கு ஏற்புடையதன்று. 'கேட்டருள்வாய்' என்பது 'நன்னயம் செய்துவிடல்' (314) என்புழிப் போல் அன்றி, 'அடங்காமை ஆரிருள் உய்த்துவிடும்' (121) என்புழிப் போல ஒரு சொல் நீர்மையது. 'செவிமடுத்துக் கேட்டல் ஆகிய அருளைச் செய்வாய்' என்பது பொருள். செவிமடுத்துக் கேட்டுத் திருவுள்ளத்திற்கொண்டால், இறைவன் அருள் செய்யாதிரான் என்பது கருத்து.




# ரஹீமின் கிருஷ்ணபக்தி

சரஸ்வதி

ரஹீம் என்ற ஓர் இஸ்லாமிய பக்தர் இருந்தார். முஸ்லீமாக இருந்தபோதிலும் இந்துக் கடவுளான கண்ணபெருமானிடம் அவர் மிகுந்த பக்தி கொண்டவர்.

ஒரு சமயம் அவர் டில்லியை ஆண்ட பாதுஷாவின் கட்டளையின்படி தென்னாட்டில் ஆட்சி புரிந்துகொண்டிருந்த ஓர் இந்து மன்னருடன் போரிட நேரிட்டது. கடும் போர் நடைபெற்றது. முடிவில் வெற்றி ரஹீமுக்கே கிடைத்தது. தோல்வியுற்ற மன்னர் ஒரு தூதுவன் மூலமாக ரஹீமிடம் கீழ்க்கண்ட செய்தியைச் சொல்லி அனுப்பினார் :— "தாங்கள் வெற்றிபெற்றது குறித்து எனக்கும் மகிழ்ச்சிதான். இந்த நிலையில் தாங்கள் என்னுடன் நட்புகொண்டால் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியும் பெருமையும் உண்டாகும். தோல்வியைச் சந்தித்த என் மனம் தங்களுடைய நட்பினால் பெருமிதம் அடையும்."

இயற்கையிலேயே இளகிய மனம் கொண்ட ரஹீமுக்கும் இந்து மன்னரின் வேண்டுகோள் நியாயமாகப்பட்டது. தவிர, அவருக்கு ஒருவர் உயர்வு மற்றவர் தாழ்வு என்ற மனப்பான்மை வளருவதே பிடிக்காது. எனவே இந்து மன்னரின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். இந்து மன்னர் ரஹீமைத் தமது அரண்மனையில் ஒரு நாளாவது தங்கி விருந்து உண்டுவிட்டுத்தான் ஊருக்குத் திரும்ப வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

இந்து மன்னரின் அழைப்பை ஏற்ற ரஹீம் அன்று மாலையே ஒரே ஒரு சிப்பாயை மட்டும் உடன் அழைத்துக்கொண்டு அரண்மனையை நோக்கிப் புறப்பட்டார். கோட்டைவாசலை அடைந்த சமயத்தில், அவரை உள்ளே செல்லவிடாமல் ஒரு சிறுவன் வழிமறித்தபடி அவரை நோக்கி, "ஐயா, தாங்கள் எங்கே செல்கிறீர்கள் ?" என்றான்.

ரஹீம்: அரசருடைய மாளிகையில் விருந்துண்ணப் செல்கிறேன்!

சிறுவன்: ஐயா! தயவுசெய்து அங்கே போகாதீர்கள்!

ரஹீம்: ஏன்?



சிறுவன்: அரசனுடைய மனதில் கெட்ட எண்ணம் மிகுந்துள்ளது. அவர் உமக்குத் தரப்போகும் உணவில் விஷத்தைக் கலந்து வைத்திருக்கிறார். உங்களைக் கொன்றபின் உங்கள் படைகளைச் சிதற அடித்து விரட்டத் திட்டம் போட்டிருக்கிறார்.

ரஹீம்: நான் அரசருக்கு இன்று வருவதாக வாக்களித்து விட்டேனே! அதை எப்படி மீறுவது?

சிறுவன்: அதனாலென்ன! சொன்ன சொல்லை மறந்து விடுங்கள்.

ரஹீம்: அது மட்டும் என்னால் முடியாது. கொடுத்த வாக்கைக் காப்பது என் கடமையாகும்.

சிறுவன் எவ்வளவோ வாதாடியும் ரஹீம் தமது எண்ணத்தை மாற்றிக்கொள்ள விரும்பவில்லை. 'அன்பில்லாதவர் இடும் அறுசுவை உண்டியைவிட அன்புடன் அழைத்து இடும் விஷம் என்றுமே மேலானது' என்று பொருள் கொண்ட பாட்டைப் பாடினார். மறுபடியும் சிறுவன் அவரைத் தடுத்தான். ரஹீமும் சிரித்துக்கொண்டே, "ஏனப்பா, நான் உன் சொல்லைக் கேட்பதற்கு நீ என்ன கிருஷ்ண பகவானா?" என்றார்.

அதைக் கேட்ட சிறுவன் கலகலவென்று நகைத்துக்கொண்டே, "நான் கண்ணனாகவே இருந்துவிட்டால்?" என்றான்.

அதைக் கேட்டதும் ரஹீமுக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. அவர் கூர்ந்து அந்தச் சிறுவனைப் பார்த்தார். இதற்குள் அந்த இடத்தில் சிறுவனுக்குப் பதிலாகக் கண்ணைக் கவரும் ஒளியுடன் கூடிய பின்னணியில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்டார். தலையிலே மயிற்பீலி, இடையிலே பீதாம்பரம், கையிலே குழல், வாயிலே புன்னகை. அவ்வளவுதான்; ரஹீம் சடேரெனக் கண்ணனின் காலடியில் விழுந்

தார். கண்ணபெருமான் சிரித்தபடியே, "ரஹீம்! இப்போது செல்ல மாட்டாய் அல்லவா?" என்றார்.

ரஹீம்: தங்கள் கட்டளையை மீறுவேனா?

பகவான் மறைந்தார். ரஹீம் அரண்மனைக்குச் செல்லாமல் திரும்பி வந்து மறுபடியும் கோட்டையை முற்றுகையிட்டார். சிலமணி நேரத்திற்குள் அரசர் கைது செய்யப்பட்டு ரஹீமுக்கு எதிரில் கொண்டு வரப்பட்டார். கைதி உடையில் வந்து நின்ற இந்து மன்னரைப் பார்த்து ரஹீம், "அரசரே! நண்பருக்குகூட நஞ்சு இடுவதுதான் சிறந்த நட்பின் அறிகுறியா?" என்று கேட்டார்.

அரசரின் தலை வெட்கத்தால் குனிந்தது. அதே சமயம், 'இந்த விஷயம் எப்படி ரஹீமுக்குத் தெரிந்தது?' என்று அவருக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. ஏனெனில், விஷம் கலக்கும் எண்ணத்தை அவர் எவரிடமும் சொல்லவில்லையே! எனவே ரஹீமைப் பார்த்து, "ரஹீம்! எனக்கு மரண தண்டனைதான் கிடைக்கும் என்று நன்றாகத் தெரியும். அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் நான் இறப்பதற்குமுன், தாங்கள் இந்த ரகசியத்தை எவ்வாறு அறிந்துகொண்டீர்கள் என்பதை மட்டும் கூறிவிடுங்கள். அது போதும்" என்றார்.

ரஹீம் தம் முகத்திலுள்ள புன்னகை மாறாமல், "அரசே! நண்பரைக் கொலை செய்ய மாட்டேன். எனவே உமக்கு மரணதண்டனை கிடையாது. ஆனாலும் அந்த விஷயத்தை மட்டும் கூறமாட்டேன்" என்றார்.

அரசரும், "ரஹீம், எனக்கு உயிர்ப்பிச்சை தேவையில்லை. ரகசியம் அறிந்த உண்மையைத்தான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்" என்றார்.

ரஹீம் கண்ணனின் மூலம் அறிந்ததாகக் கூறியதும் மன்னர் பதறியடித்துக்கொண்டு ரஹீமின் காலில் விழுந்தார். ரஹீம் அன்புடன் மன்னரை அணைத்துக்கொண்டார். அன்று முதல் இருவரும் சிறந்த நண்பர்களாயினர்.





# விதுர நீதி

'நம்பி'

தேவர்கள் ஒரு முறை ஆத்திரேய மகரிஷியைச் சந்தித்துத் தங்களுக்குச் சில நீதிகளைக் கூறுமாறு கேட்டார்கள். அவர் அடியில் வரும் நீதிகளை அவர்களுக்குச் சொன்னார்:—

ஊக்கம், அடக்கம், வாய்மை, அறம் ஆகியவற்றை மனிதன் கடைப்பிடித்து ஒழுகி மனதின் சிக்கல்களை நீக்கி, வேண்டுதல் வேண்டாமை ஆகிய இரண்டையும் சம நோக்கோடு பார்க்க வேண்டும்.

நிந்திக்கப்பட்டவன், நிந்தித்தவனைத் திரும்ப நிந்திக்கக் கூடாது. பொறுத்தவனுடைய கோபமே நிந்தித்தவனை எரிக்கிறது. நிந்தித்தவனுடைய புண்ணியத்தைநிந்திக்கப்பட்டவன் அடைகிறான்.

இழிந்தவனிடம் வேலை பார்க்க கூடாது. கர்வியாகவும் இழிந்த தொழிலைச் செய்பவனாகவும் இருத்தல் கூடாது; கொடுமையான கோபமான சொல்லைக் கடிந்து சொல்லக் கூடாது.

நல்லவனையோ கெட்டவனையோ, தவசியையோ, திருடனையோ அடுத்து வாழ்வது, ஆடை சாயத்தின் நிறத்தைப் பெறுவது போல் அவரவர் இயல்புகளைப் பெறுமாறு செய்துவிடுகிறது.

எவன் அதிகமாகப் பேசுவதில்லையோ, பிறரை அவ்வாறு பேசும்படிச் செய்வதும் இல்லையோ, அடிபட்டபோதும் எதிர்த்து அடிப்பதில்லையோ, பிறரைக் கொண்டு அடிக்கச் செய்வதும் இல்லையோ, தனக்குத் தீங்கு செய்தவனைக் கொல்ல விரும்புவதில்லையோ, தேவர்கள் அவனை நேசிக்கிறார்கள்.

பேசுவதைவிடப் பேசாமல் இருப்பது நல்லது; பேசினால் உண்மையையே பேச வேண்டும். உண்மையைப் பேசும்போதும் பிரியமாகப் பேசவேண்டும். அப்படிச் சொல்வதிலும் அறநெறிகளுக்கு உகந்ததையே சொல்ல வேண்டும்.

**எது உயர்ந்த குலம் ?**

உயர்ந்த குலம் எவ்வாறு உருவாகிறது என்பது குறித்துக் கூறுங்கள் என்று திருதராஷ்டிர மன்னன் விதுரரிடம் கேட்டான்.

விதுரர் பின்வருமாறு பதில் சொன்னார்:— தவம், புலனடக்கப், மறைகளை அறிதல், பொறுமை, யாகம், தக்க குலத்தில் திருமணம் செய்தல், இன்சொல், அன்னதானம் ஆகிய இந்த எட்டுக் குணங்களால் உயர்ந்த குலம் உருவாகிறது

நல்ல நடத்தை, நல்ல வம்சம், பொய் பேசாமை, புகழை விரும்புதல் இவற்றாலும் உயர்ந்த குலம் உருவாகிறது.

வேள்வி செய்யாமை, தீயோருடன் திருமணச் சம்பந்தம், அறநெறிகளைக் கடைப்பிடியாமை, வேதத்தை விட்டமை இவற்றால் குலங்கள் கெடுகின்றன.

செல்வம், கால்நடை, மனிதச் சேர்க்கை இவை இருப்பினும், நடத்தை கெட்ட குலமாக இருந்தால் அது இழிந்த குலம் ஆகிவிடும்.

செல்வம் குறைவாக இருப்பினும் ஒழுக்கமுள்ள குலம் உயர்ந்த குலமாகக் கொள்ளப்படும். பெரும் புகழையும் அது பெறுகிறது ஒழுக்கத்தை என்றும் காக்க வேண்டும். பணம் வரும், போகும். பணமில்லாதவன் கெட்டவன் அல்லன்; ஒழுக்கம்கெட்டவனே கெட்டவன் ஆவான். ஒழுக்கம் குன்றி இழிவடைந்த குலம், கல்வி, கால்நடை, செழிப்பான வேளாண்மை, குதிரை முதலியவற்றால் முன்னுக்கு வருவதில்லை.

**உறவினர்**

உறவினர்களிடையே பிரிவு உண்டானால், பிரிக்கப்பட்ட கொள்ளி புகைந்து மங்குவது போல, மங்கிப் போகிறார்கள். சேர்ந்து வாழ்ந்தால் சேர்ந்த கொள்ளிபோலப் பிரகாசிக்கிறார்கள்.

நன்றாக வேரூன்றிப் பல கிளைகளுடன் கூடிய பெருத்த மரமாகச் சிறப்புற்றுத் தனித்து இருந்தால், காற்றினால் முறிந்து போகக்கூடிய வாய்ப்பு உண்டு. அப்படி இல்லாமல் கூட்டமாகச் சேர்ந்து வேரூன்றிக் கொண்டு இருக்கும் மரங்கள், வேகமான காற்றையும் தாக்கிப் பிடித்து முறியாமல் இருக்கின்றன.

தனித்து உள்ள மனிதனை, தனித்த மரத்தைக் காற்றுத் தள்ளுவதுபோல, வெகு எளிதில் பகைவர்கள் தள்ளிவிடுகிறார்கள்.

செல்வம் கொடியவர்களிடம் இருந்தால் பெரிய அழிவை உண்டாக்குகிறது. நல்லவரிடத்தில் சேர்ந்தால், மகன் பேரன் முதலியோரை அடைகிறது. ❋




# ஆருணேய உபநிஷதம்

ஆருண்யோபநிஷதத்தின் கருத்துக்கள் இங்கே தரப்பெறுகின்றன.

**உபநிஷதத்தின் பெயரும் தொடர்பும்**

'ஆப்யாயந்து' என்ற சாந்திபாடத்தின் அடையாளத்தினுல் இது ஸாமவேதத்தைச் சேர்ந்தது என்று ஊகிக்கப்படுகிறது.

மகாநாராயண உபநிஷத்தின் முடிவில், 'மோட்ச சாதனங்கள் அனைத்திலும் சன்னியாசம்தான் சிறந்தது' என்று ஆருணி பிரஜாபதியால் உபதேசிக்கப்பெற்ருர் என்று காணப்படுகிறது. அதே மாதிரி இங்கும் பிரஜாபதியால் ஜாபால உபநிஷத்தில் பரமஹம்சர்களைப்பற்றி, 'அடையாளம் காண முடியாதவர்கள், நடத்தை காணமுடியாதவர்கள், பித்தர்கள் அல்லராயினும் பித்தர்களைப்போல் நடப்பவர்கள்' என்று கூறி, அந்த வரிசையில் ஆருணியும் சேர்த்துக் கூறப்படுகிருர்.

ஆருணிக்குச் சன்னியாச லட்சணம் உபதேசிக்கப்பட்டது கூறப்படுவதனுல் இதற்கு ஆருணேயோபநிஷதம் என்ற பெயர் பொருந்துகிறது.

* * *

1. பிரஜாபதியின் புத்திரரான ஆருணி பிரஜாபதிலோகம் சென்ருர். அங்கு சென்று பிரஜாபதியிடம் அவர், "பகவானே! எதனுல் நான் எல்லா கர்மங்களையும் முற்றும் துறந்தவனுவேன்?" என்று வினவினுர்.

அதற்குப் பிரஜாபதி கூறியதாவது:—

உன் புத்திரர், சகோதரர், உறவினர், சிகை, பூணூல், ஸூத்ரம், ஸ்வாத்யாயம், பூ: புவ: முதலிய மேல் ஏழு உலகங்களையும் அதல விதல முதலிய கீழ் ஏழு உலகங்களையும் பிரம்மாண்டம் முழுவதையும் அறவே துறக்க வேண்டும். தண்டம், உடலை மறைக்க ஆடை, கௌபீனம் ஆகியவற்றை வைத்துக்கொள்ளலாம். மற்றவை அனைத்தையும் துறக்க வேண்டும்.

2. இல்லறத்தவனே பிரம்மசாரியோ, வானப்பிரஸ்தனே (ஆராதித்து வந்த) வைதிக அக்கினிகளை வயிற்றிலுள்ள ஜாடராக்கினியால் ஸமாரோபணம் செய்துவிட வேண்டும். காயத்ரியையும் தன் வாக்காகிற அக்கினியால் ஸமாரோபணம் செய்துவிட வேண்டும். பூணூலைப் பூமியிலாவது ஜலத்திலாவது போட்டுவிட வேண்டும். வேத விரதத்துடன் குடிசையில் வாழ்பவன் குடும்பத்தைத் துறக்க வேண்டும். பாத்திரத்தைத் துறக்க வேண்டும். பவித்திரத்தைத் துறக்க வேண்டும். தண்டத்தையும் உலக அக்கினிகளையும் துறக்க வேண்டும். அதற்குப் பின் மந்திரமல்லாதவனைப்போல் நடந்துகொள்ள வேண்டும். மேலுலகங்களுக்குச் செல்ல வேண்டும் என்ற ஆசையைத் துறக்க வேண்டும். ஆகாரத்தை மருந்து போல் (அளவோடு) உண்ண வேண்டும். மூன்று

ஸந்தியாகாலங்களிலும் ஆத்மாவில் ஸமாதி கூடவேண்டும். வேதங்கள் அனைத்திலும் ஆரண்யகப் பகுதியைப் பாராயணம் செய்ய வேண்டும். உபநிஷதங்களைத் திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும். பூணூல் ஓர் அடையாளம். அது பிரம்மமே ஸூத்ராத்மா என்பதையும், அந்தப் பிரம்மமே நான் என்பதையும் குறிக்கிறது என்று உணர வேண்டும். இவ்விதம் எவன் அறிந்தவனோ அந்த அறிவாளி முப்புரிநூலைத் துறக்க வேண்டும்.

3. 'ஸந்ந்யஸ்தம் மயா, ஸந்ந்ஸ்தம் மயா, ஸந்ந்யஸ்தம் மயா—என்றால் அனைத்தும் துறக்கப்பட்டது' என்று மூன்று தடவை உச்சரித்து, 'எல்லா உயிர்களுக்கும் அபயமளிக்கிறேன்; என்னிடமிருந்தே எல்லாம் உண்டாகிறது' என்று சொல்லவும். என்னைக் காப்பாற்றும் நண்பனாகவும், இந்திரனுடைய வஜ்ரம் போல் துன்பங்களைப் போக்குபவனாகவும் அமைதியைத் தருபவனாகவும் நீ இரு. எது பாவமோ அதை என்னிடமிருந்து விலக்கு' என்ற பொருளுடைய மந்திரத்தால் ஒரு மூங்கில் தண்டத்தை எடுத்துக்கொள். கௌபீனத்தைத் தரித்துக்கொள். மருந்தைப் போல் (அளவுடன்) ஆகாரத்தைக் கருது. மருந்தைப்போல எது கிடைக்கிறதோ அதைச் சாப்பிடு. பிரம்மசரியம், அகிம்ஸை, அபரிக்ரஹம் (ஏலாமை, எதையும் சேர்த்து வைத்துக்கொள்ளாமை), சத்தியம் ஆகிய விரதங்களை நன்முயற்சியுடன், சாதுவே, காப்பாற்று, காப்பாற்று, காப்பாற்று.

4. பரமஹம்ஸ பரிவ்ராஜகர்களுக்கும் பிரம்மசாரிகளுக்கும் தரையே ஆசனம் படுக்கை ஆகிய எல்லாம் ஆகும். மண் பாத்திரமோ சுரைக்காய்ப் பாத்திரமோ மரப் பாத்திரமோ வைத்துக்கொள்ளலாம். காமம், கோபம், உலோபம், மோகம், இடம்பம், கொழுப்பு, ஆசை, பொறாமை, மமகாரம், அகங்காரம் முதலியவற்றை ஒழிக்க வேண்டும். மழைக்காலமாகிய நாலு மாதம் சஞ்சாரம் செய்யக்கூடாது. மற்றும் எட்டு மாதங்கள் யதி ஓரிடத்தில் இராமல் தானொருவனாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்க வேண்டும். சாதுர்மாஸ்யம் நான்கு பக்ஷம் அல்லது இரண்டு மாதமாவது கைக்கொள்ள வேண்டும். உபநயனத்திற்குப் பின்போ முன்போகூட ஞானமடைந்தவன் எவனோ அவன் இவ்விதம் துறக்கலாம். தந்தை, தனயன், அக்கினி, பூணூல், கர்மா, களத்திரம், மற்றும் அனைத்தையும் துறக்க வேண்டும்.

5. சன்னியாசி கையையே பாத்திரமாகக் கொண்டோ வயிற்றையே பாத்திரமாகக் கொண்டோ கிராமத்தில் பிச்சைபுக வேண்டும். 'ஓம் ஹி, ஓம் ஹி, ஓம் ஹி' என்ற உபநிஷத மந்திரத்தை ஜபிக்க வேண்டும். இப்படி அறிந்தவனுக்கு இதுவே யஜ்ஞோபவீதம். பலாசமோ வில்வமோ அத்தியோ எதுவாக இருந்தாலும் (பிரம்மசரிய ஆசிரமத்தில் கைக்கொண்ட) தண்டத்தையும் முஞ்ஜிப்புல் அரைஞாணையும் பூணூலையும் இவ்விதம் அறிந்த வீரன் துறக்க வேண்டும். (அதுதான் பரமபதம். அதைப் பற்றியது பின்வரும் மந்திரம்) — 'அது விஷ்ணுவின் பரமபதம். அதைத் தேவலோகத்தில் கண்கொட்டாமல் பார்ப்பது போல் ஞானிகள் எப்பொழுதும் மலர்ந்த கண்கொண்டு பார்க்கிறார்கள். ஆசையை வென்ற சாதகர்கள், எப்பொழுதும் விழிப்புடையவர்களாய் இந்த விஷ்ணுபதத்தை நாடுகிறார்கள்.'

இங்ஙனம் நிர்வாணம் என்ற முக்திக்கு வழி என்பது வேதத்தின் கட்டளை, வேதத்தின் கட்டளை, வேதத்தின் கட்டளை என்று மூன்று முறை கூறி ஆருணேய உபநிஷதம் நிறைவுபெறுகிறது. ※

---

நிபுணர்களுக்கு இருக்கும் ஒரு குறை என்னவென்றால்,
அத்தகைய திறமை பிறரிடத்தில் இருப்பதை அவர்கள் நம்ப
மாட்டார்கள். அவர்களுக்குத் தாங்கள் செய்ய விரும்பும் காரியத்தில்
பிறர் கை வைத்தால் அது அடியோடு பாழாகிவிடும் என்ற பயம்.

—ரவீந்திரநாத்தாகூர்.

# கடவுளுக்கு ஒரு சாபம்

'வால்மீகி'

ஒரு சமயம் தேவர்களினால் தோற்கடிக்கப் பட்ட அசுரர்கள் மகாபதிவிரதையும் பிருகு முனிவரின் மனைவியுமான கியாதியிடம் சரணடைந்து, அவளுடைய பாதுகாப்பில் வாழ்ந்து வந்தார்கள். கியாதியின் பதிபக்தி என்ற சக்தி அரக்கர் குலத்துக்கு அரண் போல இருந்து காத்து வந்தது. இதை அறிந்த தேவர்கள், திருமாலிடம் சென்று முறையிட்டனர். கியாதி இறந்து அவளுடைய சக்தியிலிருந்து அசுரர்கள் விடுபட்டாலன்றி, அவர்களுடைய பலம் நாள்தோறும் பெருகி உலக அழிவிற்கு அடி கோலும் என்றும், ஆகையால் அதர்மத்திற்கு ஆதரவு தரும் கியாதியை அழிக்க வேண்டும் என்றும் அவர்கள் கேட்டுக் கொண்டார்கள். திருமால் தமது சக்ராயுதத்தை ஏவி, கியாதியின் தலையை அறுத்துத் தள்ளினார்.

இதைக் கண்ட பிருகு முனிவர் கொதித்தெழுந்தார்.

"ஹே ஜனார்த்தனா! என் மனைவி உனக்கு ஒரு தீங்கும் செய்தாளில்லை. நிராயுத பாணியான ஒரு பெண்ணை, அதிலும் ரிஷி பத்தினியை, காமக் குரோதங்களுக்கு வசப் பட்ட மனிதனைப் போல நீ படுகொலை செய்தாய். இந்தப் பாதகத்தின் விளைவுகளை நிச்சயமாக நீ அனுபவித்தே தீரவேண்டும். மனிதர்கள் வாழும் உலகிலே இன்ப துன்பங்களுக்கு வசப்பட்ட மனிதனாக நீ பிறக்கக் கடவாய். என் மனைவியை எப்படி என்னிடமிருந்து பிரித்து என்னைத் துன்பத்துக்கு உள்ளாக்கினாயோ அதே போல நீயும் உன் மனைவியைப் பல வருடகாலம் பிரிந்து நான் இப்போது துன்பப்படுவதைப் போலவே துன்பப் படுவாய்."

இப்படிப் பிருகு முனிவர் திருமாலுக்குச் சாபம் கொடுத்தார். கொடுத்த சாபத்திலே அவருடைய கோபம் தணிந்தது. சிந்தையும் தெளிவுபெற்றது. 'சர்வேச்வரனான ஜனார்த்தனனுக்கு அல்லவா நாம் சாபம் கொடுத்து விட்டோம்! ஆத்திரத்தில் அறிவிழந்து விட்டோமே. ஆசாபாசங்களும் பட்சாதாபமும் இல்லாமல் உலக சம்ரட்சணைக்காக அவர் செய்யும் காரியங்களிலே எது தர்மம் எது அதர்மம் என்பதை முடிவு செய்ய நான் யார்? முக்காலங்களையும் அறிந்த சர்வேச்வரன் செய்யும் காரியம் எப்படி அதர்மமாக இருக்க முடியும்? தர்மத்தின் ரட்சகர் அதர்மமாகக் கொலை செய்துவிட்டார் என்று எத்தனை பெரிய பழியை அவர்மீது சுமத்திச் சாபமும் கொடுத்துவிட்டேன்? என் சாபத்தின்படி நடக்காவிட்டால் என் வார்த்தை பொய்யாகிவிடும் என் சாபம் பலிக்க வேண்டுமென்றால் பகவான் மனிதனாகப் பிறந்து துன்பப்படவேண்டியிருக்கும். மனைவியிடம் கொண்ட பாசத்தினால் அல்லவா பகவானையே சபித்துவிட்டேன்?" என்று பிருகு முனிவர் புலம்பினார்.

அப்பொழுது பகவான் அவருக்குத் தரிசனம் கொடுத்து, "முனிசிரேஷ்டரே! உங்கள் வாயிலிருந்து பொய் வரமாட்டாது. நடக்கப் போவதும் நடக்க வேண்டியதுமே உங்களைப் போன்றவர்கள் வாயிலிருந்து தீர்க்கதரிசனம் போல வெளிவரும். நீங்கள் கொடுத்த சாபத்தை மகிழ்ச்சியோடு ஏற்று அதை மெய்யாக்குகிறேன். நடக்கப் போகிற காரியம்தான் உங்கள் வாயிலிருந்து சாபமாக வெளிப்பட்டது; கவலையை விடுக!" என்று சமாதானம் செய்தார்.

இந்தச் சாபத்தின்படி, ஸ்ரீராமன் தமது வாழ்நாளில் பெரும் பகுதியைச் சீதையிடமிருந்து பிரிந்து வாழ நேரிட்டது. பிருகு முனிவரின் சாபத்தை நிறைவேற்றி வைக்க ஸ்ரீராமனுக்கு ஒரு தடவை கைகேயி பயன்பட்டாள். இன்னொரு தடவை ஒரு சலவைத் தொழிலாளி பயன்பட்டான். சீதையைக் காட்டுக்கு அழைத்துப் போகவும், அவளை இராவணன் அபகரித்துச் செல்லவும் கைகேயியின் சாகசம் ராமனுக்கு உதவியாக இருந்தது. இராவணவதம் முடிந்து ராமபட்டாபிஷேகம் நடந்த பின்னர் கர்ப்பிணியாக இருந்த சீதையைத் திரும்பவும் காட்டுக்கு விரட்ட, ஒரு சலவைத் தொழிளாளியின் அபவாதப் பேச்சுக்களை ராமர் உபயோகித்துக் கொண்டார்.

ஆக, கைகேயி தசரதரிடம் சாகசம் செய்து ராமனைக் காட்டுக்கு அனுப்ப, அவளது மகன் பரதன் அரசாளவேண்டும் என்ற பேராசை மட்டும் காரணமாக இருக்கவில்லை. பிருகு முனிவரும் நாரதரும் தமக்குக் கொடுத்த சாபத்தையும், ஸனத்குமாரர்கள் ஜயவிஜயர் என்ற தமது இரு துவாரபாலகருக்குக் கொடுத்த சாபத்தையும் நிறைவேற்றவே திருமால் கைகேயியைப் பயன்படுத்திக்கொண்டார். கைகேயியின் வாழ்க்கையிலே கடவுளே சதிசெய்யத் தலைப்பட்ட பிறகு அவளைக் குறை கூறலாமா? எய்தவன் இருக்க அம்பை நோகலாமா?

# எங்கும் நிறை ஏகநாயகன்

சுவாமி அமரானந்தர்



'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி' என்பது ரிக்வேத வாக்கியம். 'மெய்பொருள் ஒன்று; அதற்குச் சான்றோர் பல பெயரிட்டு அழைக்கின்றனர்' என்பது அதன் பொருள்.

மெய்ப்பொருளான ஏகநாயகன் எறும்பு முதல் யானை வரை உள்ள எல்லா ஜீவராசிகளின் உள்ளத்திலும், மற்றும் புறத்தில் அங்கு இங்கு ஏனதபடி எங்கும் நிறைந்திருக்கிறான். இந்தக் கருத்தை 'கைவல்ய நவநீதம்' என்னும் நூல் தன் முதற்பாடலில் விளக்குகிறது. அது வருமாறு—

பொன் நிலம் மாதர் ஆசை பொருந்தினர்
பொருந்தார் உள்ளம்
தன்னில் அந்தரத்தில் சீவ சாட்சி மாத்திரம்
ஆய் நிற்கும்
எந் நிலங்களிலும் மிக்க எழுநிலம் அவற்றின்
மேல் ஆம்
நன் நிலம் மருவும் ஏக நாயகன் பதங்கள்
போற்றி.

[அந்தரத்தில் – ஆகாசத்தில்; மருவும் — பொருந்தும்.]

பொன் மண் பெண் ஆகிய மூன்று ஆசைகள் பொருந்தியவர்களின் உள்ளத்திலும், அவை பொருந்தாத சான்றோர்களின் உள்ளத்திலும், மற்றும் புறத்தில் ஆகாயத்தில் எங்கும் பரவியும், ஜீவனுக்குச் சாட்சி மாத்திரமாயும், எல்லாவற்றிலும் மேலாகியும் இருக்கும் ஒரே பரம்பொருளான ஏகநாயகனின் மலரடிகளைப் போற்றுவோமாக.

ஆசைகளின் அடிப்படையிலேயே உலக வாழ்வு அமைகிறது. இந்த ஆசைகளே இங்கு அல்லல்களுக்கெல்லாம் காரணம் என்பது மகான் புத்தரின் கோட்பாடு ஆகும்.

அவாக்களையெல்லாம் தொகுத்து எடுக்குமிடத்துப் பொன்னாசை மண்ணாசை பெண்ணாசை என மூன்று வகைகளில் அடங்குகின்றன. இவற்றின் வசப்படுவதனால் பிரகிருதியில் அதாவது பிரபஞ்சத்தில் கட்டுண்டு சாதாரண மனிதன் அல்லல் படுகிறான்.

ஆசையினின்று விடுபட்டவன் மேலோன் ஆகிறான். அவனுடைய உள்ளத்தில் ஆசைகள் பொருந்துவதில்லை. விருப்பங்கள் மருவாத தூய உள்ளத்தில் மெய்ப்பொருளாகிய ஏதநாயகனின் சான்னித்யம் தூய கண்ணாடிப் பெட்டிக்குள் இருக்கும் பொருள் தெரிவது போலத் தெளிவாகத் தெரிகிறது. தெள்ளத்தெளிந்த மாணிக்கவாசகப் பெருமானுக்கு இமைப்பொழுதும் அவருடைய நெஞ்சில் நீங்காமல் அந்த நாதன் குடி கொண்டிருக்கிறான்.

ஆசைகள் பொருந்திய மாந்தரின் உள்ளத்தில் அவனுடைய சான்னித்யம் கலர்க்கண்ணாடியின் மூலம் வரும் வெளிச்சம் போல் மங்கிய நிலையில் இருக்கிறது.

பூரணப் பொருளான ஈசனின் சான்னித்யம் இல்லாத இடமே இல்லை. அறிவு வேறு, ஈசன் சான்னித்யம் வேறு அல்ல; இரண்டும் ஒன்றே. 'அறிவான தெய்வமே' என்கிறார் தாயுமானவர்.

மக்களின் உள்ளத்தில் குடிகொண்டிருப்பது போலவே புறத்தேயும் அந்தரத்தில் அங்கு இங்கு ஏனதபடி ஈசன் எங்கும் நிறைந்து மற்றும் எல்லா உயிர்களிடத்திலும் குடிகொண்டிருக்கிறான். 'பல்லுயிராய்ப் பார் தோறும் நின்றாய்' என்று நாவுக்கரசர் அவனைப் போற்றுகிறார்.

அறிவு இல்லாத ஜீவன்களே இல்லை நிலைத்திணையான தாவரங்களிடத்திலும் அறிவு இருக்கிறது.

அறிவுமயமாக ஈசன் எல்லா ஜீவர்களிடத்திலும் குடிகொண்டிருக்கிறுன் என்பது அனுபவமாகிறது. 'ஜீவர்களின் உள்ளத்தில் இருப்பதுபோலவே அந்தரத்தில் அதாவதுவெளிப்புறத்தில் அங்கு இங்கு எனுதபடி எங்கும் ஈசனது சான்னித்யம் நிறைந்திருக்கிறது என்பதை எப்படித் தெரிந்துகெள்வது?' என்ற வினு எழுகிறது.

அறிவு இல்லாத இடமே இல்லை. உள்ளத்தில் உள்ள அறிவு தூக்கத்தில் வேலை செய்வதில்லை. அது மங்கி மிகவும் நுண்ணிய நிலையில் இருக்கிறது. அதனுலேயே தூங்கி எழுந்தவுடன் ஒன்றும் தெரியாது நன்கு தூங்கிய நினைவு அனைவருக்கும் உண்டாகிறது.

தூங்கி எழுந்து எத்தனையோ காட்சிகளை மனிதன் பார்க்கிறுன். தன் அறிவைக் கொண்டே அவற்றை உணருகிறுன். தன் அறிவு வேலை செய்யவில்லை என்ருல் அந்தப் பொருள்களின் இருப்பு உணரப்படுவதில்லை. பொருளுக்கும் தனக்கும் இடைவெளியிலுள்ள தூரத்தின் மூலம் அறிவு சென்றே அந்த இடைவெளியையும் அந்தப் பொருளையும் பொருட்படுத்துகிறது.

தொலைதூரத்தில் உள்ள அயல்நாட்டின் நகரங்களைப் பார்த்து வந்த ஒருவனுக்கு மீண்டும் அந்த நகரங்களின் நினைவு வரும்போது அறிவு இடையிலுள்ள நெடுந்தூரத்தைக் கடந்து அந்த நகரங்களின் மேல் சென்றுவிடுகிறது. ஆனுல் இது கணப்பொழுதில் நிறைவேறிவிடுகிறது. இதுவே மனுேவேகம் என்று சொல்லப்படுகிறது.

மின்சாரம், வெளிச்சம், சப்தம் போன்ற மற்ற எல்லா வேகத்தையும் விட மனுே வேகம் மிகவும் அதிகமானது. அறிவு, மனமாக வடிவெடுத்தே இங்ஙனம் செயல்படுகிறது. காட்சிகளை உணரும்பொழுது அறிவு அந்தக் காட்சிகளின் மயமாகி விடுகிறது. அந்த அறிவு தன் உள்ளத்தில்உள்ளதையும் அவன்மறந்துவிடுகிருன். பார்க்கும்நகரத்தின் காட்சி மாத்திரம் இருக்கிறது. தன் அறிவே அந்தக் காட்சியாகிவிடுகிறது. உருவம் இல்லாத அறிவு இடைவெளியாயும் அந்த நகரமயமாகவும் பரிணமித்துவிடுகிறது. இது அனைவருக்கும் அனுபவபூர்வமானது.

நகரத்தின் காட்சியைப் பார்ப்பது தன் உள்ளத்தில் உள்ள அறிவுதான் என்பதை மறப்பதல்லாமல் தனக்கு ஓர் உடல் இருப்பதையும் மறந்துவிடுகிறுன் அந்த ஜீவன். மேலும், அந்தநகரத்தின் காட்சியை ரசிக்கும்போது அந்த நகரத்தில் முன்பு வாழ்ந்த இடமும் சுற்றித் திரிந்த இடங்களும் தன் உடல்சொரூபம் உட்படக் காட்சியில் இருக்கிறது. தான் நடித்த சினிமாக்காட்சி போன்று தென்படுகிறது. அந்த நிலையில் தான் தன் உடல்சொரூபத்துடன் இருக்கும் இடத்தில் இருப்பதே மறந்துவிடுகிறது.

இப்படியாகச் சூரிய மண்டலம் சந்திர மண்டலம், நட்சத்திர மண்டலங்கள் ஆகியவற்றை ஆராயும்போது அறிவு அந்த மண்டலங்களின் மயமாகி விடுகிறது. அண்டங்கள் அனைத்தையும் கடந்து, காட்யே இல்லாத சூன்யத்தையும் காண்கிறது. ஆனுல் இந்தக் காட்சிகள் நிலையாகவும் இருப்பதில்லை. காட்சிகளை மறந்து நிச்சிந்தையாக இருக்கும் அனுபவமும் உண்டாகிறது.

இங்ஙனம் காட்சிகள் உட்பட உடல்சொருபங்களையெல்லாம் மறக்கும்போது அகண்டமாய் ஏகமாய் எதையும் சாராமல் தன்னில் தானுய் அறிவு மாத்திரம் எஞ்சியிருக்கிறது. அதுவே பொதுவான பேரறிவு ஆகிவிடுகிறது. இவ்வளவு நுணுக்கமான அகண்ட மெய்ப்பொருளைச் சான்ருேர் தங்கள் அனுபவ வாயிலாக உணர்ந்து உலக உபகாரமாகத் தங்கள் அனுபவத்தை வெளியிடுகிருர்கள். 'சிந்தை எங்கு செல்லும் அங்குன் செம்மை தோன்றுமன்ருே' என்பது அமரகவி பாரதியாரின் திருவாக்கு. அறிவு வேறு, ஈசன் வேறு அல்ல என்பது மேலே சொல்லப்பட்டது. எனவே அறிவுமயமான ஈசன் எங்கும் நிறைந்திருக்கிறுன் என்பது கொள்ளத்தக்கதாகும்.

ஈசன் எங்கும் நிறைந்திருப்பதல்லாமல் பிரபஞ்ச காரியங்களுக்குக் கட்டுப்படாமல் அவற்றுக்குச் சாட்சி மாத்திரமாய் இருக்கிறான். அதாவது புலன்களின் வசப்பட்ட ஜீவர்களின் நடவடிக்கைகளைப் பொருட்படுத்தாமல் அவற்றுக்குச் சாட்சிமாத்திரமாக இருக்கிறான். 'பரமாத்மா யாருடைய பாவ புண்ணியத்தையும் பொருட்படுத்துவதில்லை, ஞானம் அஞ்ஞானத்தால் மூடப்பட்டிருக்கிறது. ஆதலால் உயிர்கள் மயக்கமடைகின்றன' என்று பகவத்கீதை கூறுகிறது.

இங்ஙனம் தன்மயமான பேரறிவுசொருபமாயுள்ள பரமாத்மா புலன்களின் வாயிலாகச் சிதறடையும்போது சித் ஆபாசமடைந்து சிதாபாசன் அதாவது சிற்றறிவாளன் ஆகிவிடுகிறான். அறிவு அறியாமையைக் கடந்து தன்மயமாயுள்ள சைதன்யம் அதாவது சித், அறியும்போது சிதறிச் சிற்றறிவு ஆகிவிடுகிறது. (பல சிற்றறிவுகளாகச் சிதறிக் காணப்படும்போதும் பேரறிவான பரம்பொருள் தன் நிஜ சொருபத்தினின்று இம்மியளவும் பிசகுவதில்லை. அதாவது அதற்கு எவ்வித மானதோர் ஹானியுமில்லை அது யாண்டும் இருந்தபடியே தன்னில் தானாய் இருக்கிறது. தாடகத்தின் நீர் அசையும்போது அதில் சூரியனின் பிம்பம் அசைவதுபோல் தென்பட்டாலும் மூல சூரியன் யாண்டும் அசையாமல் இருந்தபடி இருக்கிறது.) சிற்றறிவு உடைய ஜீவன் ஆசையின் வசப்பட்டு, புலனின்பங்களில் சிக்கி, இன்ப துன்பங்களுக்கு ஆளாகிறான். பேரறிவாகிய பரமாத்மா எதையும் சாராமல் தன்னில் தானாய் இருப்பதனால் அது எந்தப் பாவ புண்ணியத்துக்கும் இந்த ஜீவர்களின் நடவடிக்கைகளுக்கும் சம்பந்தப்படுவதில்லை. சாட்சி மாத்திரமாய் இருந்துகொண்டு இருக்கிறான்.

மனச்சாட்சி என்பதுவும் இதுவேயாகும். (விச்வேசோSயம் துரீய: ஸகல ஜனமன: ஸாக்ஷிபூதோ அந்தராத்மா—விச்வத்துக்கு நாதனான பரம்பொருள் துரியமாகிய நாலாவது நிலையில் இருந்துகொண்டு எல்லாருடைய மனதுக்கும் சாட்சியாக வீற்றிருக்கிறான்—சங்கரர்.) சாட்சி என்பது நடுநிலையாகும். காட்சிகளின் சாதகபாதகத்தில் கட்டுப்படாமல் இருத்தல் ஆகும். சாட்சி சொல்லுதல் என்பது வாதிப் பிரதிவாதிகள் ஆகிய இருதரத்தாரில் யாருக்கு என்ன நேரிடுகிறது என்பதைப் பொருட்படுத்தாமல் கண்டதைக் கண்டபடி சொல்லுவதாகும்.

அறுவைச் சிகிச்சை செய்யும் மருத்துவன், நோயாளி வாழ்வான் அல்லது மரிப்பான் என்ற சிந்தனையின்றி, நடுநிலையில் நின்று அந்தச் சிகிச்சையை அளிக்க முடிக்கிறது. அதே மருத்துவன் தான் பற்று வைத்த தன் மகனுக்கு அந்த ரணசிகிச்சையை அளிக்க முடிவதில்லை. இங்ஙனம் ஜீவாத்மனே நடுநிலையில் இருந்துகொண்டு செயற்பட இயலுகிறது. பரமாத்மா செயல்களைக் கடந்து இருப்பதால் அது சும்மா இருந்துகொண்டு அனைத்துச் செயல்களுக்கும் சாட்சிபூதமாக இருக்கிறது

ஆசையில் கட்டுண்ட ஜீவன் அறியாமையினால் மெய்ப்பொருளை அறியாமல் மயங்கிப் பாவபுண்ணியத்துக்கு ஆளாகிறான் ஞானி ஒருவன் ஆசையின் வசப்படாததனால் மெய்ப்பொருளை உணருகிறான். சாஸ்திரங்களின்படி பரமத்மனை சாதனையின் மூலம் உணரும் தன்மை ஏழு படித்தரங்களில் வைத்து ஏழு ஞானபூமிகளாக, சுபேச்சை, விசாரணை, தனுமானஸி, சத்துவாபத்தி, அசஞ்சத்தி, பதார்த்தபாவனை, துரியம் என்று முறையே சான்றோர்களால் வகுத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றின் ஏழாம் பூமியாகிய துரியத்திலும் அதற்கு மேலான துரியாதீதத்திலும் ஏகமாய் எங்கும் நிறைந்த ஈசனின் நிறைநிலை நன்கு உணரப்படுகிறது.

அவன் சான்னித்யம் துரியத்தில் நன்கு உணரப்படுவதனால் மற்ற எல்லா ஞானநிலைகளைவிட அது மேலான நன்னிலம் ஆகிறது.

சர்வேச்வரனுடைய சான்னித்யவிஷேத்தால் பிரகிருதி அதாவது பிரபஞ்சம் இயங்குவதால் அதற்கு அவன் நாயகன் ஆகிறான். 'அவனன்றி ஒரணுவும் அசையாது' என்பது கோட்பாடு. நாயகன் என்ற சொல் கணவன், அரசன், ஆண்டவன் என்ற பொருள்களை உடையது. ஒரு குடும்பத்தைக் கணவன்

இயக்குவதனுல் அவன் அந்தக் குடும்ப நாயகன் ஆகிருன். நாடு ஒன்றை ஆளும் அரசன் அந்த நாட்டின் நாயகனுக இருக்கிருன். பிரபஞ்சம் அனைத்தையும் ஆளுகிற ஆண்டவனுக்கு அதன் நாயகன் என்ற பதம் பொருத்தமாக அமைகிறது. அதனுல் அவன் விசுவநாதன் எனப்பெயர் பெறுகிருன். வேதநாயகன், வேதியர்நாயகன், மாதின்நாயகன், மாதவர்நாயகன், ஆதிநாயகன், ஆதிரைநாயகன், பூதநாயகன் என்று அப்பரடிகள் போற்றுகிருர் உலகநாயகனை. அவன் ஒருவனே அனைத்துக்கும் நாயகன் ஆகிருன்.

பரமாத்மன் இடையீடின்றி எங்கும் பரந்து நிறைந்து இருப்பதனுல் அவனுக்கு அன்னியமாக வேறு ஒரு பொருள் இருப்பதற்கில்லை. அவனுக்கு அன்னியமாக வேறு ஒரு பொருள் இருப்பதாகக் கூறப்படுமாயின் அவனது நிறைநிலையைக் குறைவுபடுத்துவதாகும். எனவே அவன் ஏகன் ஆகிருன். பரம்பொருள் போற்றுதற்கு உரியவனுக இருக்கிருன்.

---

# அடியவர்களின் பெருமிதம்

**வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்**

இறைவனுக்கு ஆட்பட்ட அடியவர்களுக்கு அச்சம் என்பதே இராது. மரணத் துன்பத்துக்கும் அவர்கள் அஞ்சமாட்டார்கள்.

''யாம் ஆர்க்கும் குடிஅல்லோம்;
யாதும் அஞ்சோம்;
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை''

என்ற பெருமிதத்தோடு இருப்பார்கள். பெரிய செல்வர் ஒருவரை நெருங்கிய நண்பராகப் பெற்றவர் அந்த நட்பினுல் மிகவும் தைரியத்தோடும் ஊக்கத்தோடும் வாழ்வார். எந்த இன்னல்வந்தாலும் அவரால் போக்கிக் கொள்ளலாம் என்ற உறுதிப்பாடு அவரிடம் இருக்கும்.

மனிதர்களின் நட்புறவினுலே இப்படி ஒரு மனத்தின்மை வருகிறதென்ருல் எல்லாம் வல்ல இறைவனுடைய அருட்பலத்தைப் பெற்றவர்கள் கொள்ளும் மிடுக்குக்கு உவமையே இல்லை.

''நாவலித் துமிதர் கின்ருேம்
நமன் தமர் தலைகள் மீதோ''

என்ற வீறுப்பை அவர்களிடம் காணலாம். காரைக்காலம்மையார் இத்தகைய உள்ளத் திண்மையை உடையவர். அவரோடு கொஞ்சம் பேசலாமா!

''அம்மையாரே, உங்களுக்கு இவ்வளவு செருக்கு இருக்கிறதே! உங்களுக்கு அச்சம் சிறிதும் இல்லையா?'' என்று நாம் கேட்கிருேம்.

''அச்சம், தளர்ச்சி, சோர்வு ஆகியவை எல்லாம் மனத்தில் எழுபவை. எம்முடைய சிந்தையில் அவை எழுவதில்லை. எம் சிந்தையார் செருக்குடன் இருக்கிருர்.''

அவருடைய பெருமிதம் தம்முடைய மனத்தையே உயர்த்திப் பேசச் செய்கிறது. 'சிந்தையார்' என்று மதிப்புடன் பேசுகிருர். அந்தச் சிந்தையாரிடத்தில் அவருக்கு அவ்வளவு நம்பிக்கை.

**சிந்தையார்க்கு உற்ற செருக்கு**

''இந்தச் செருக்கு உங்கள் சிந்தையார்க்கு எவ்வாறு வந்தது?''

''எல்லாம் வல்ல எம் தந்தையாருக்கு அடிமைப்பட்டு வாழும் நல்வாழ்வு நமக்குக் கிடைத்திருக்கிறது. அது காரணமாகத்தான் இந்தச் செருக்கு வந்திருக்கிறது.''

''பணத்தாலும் அறிவாலும் உடல்வலிமை யாலும் சிறந்து நிற்பவர்கள் செருக்குடன் இருப்பதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் அந்தச் செருக்கு நிலையாக நிற்பதில்லை. செல்வம் சகடக்கால் போல வரும். ஒருகால் வளம்பெற்றோர் மற்றொருகால் வளம் சுருங்கிச் செருக்கழிந்து நிற்கிறார்கள். அறிவிற் சிறந்தவர்களும் தம் அறிவெல்லைக்கு அகப்படாத பொருளைப் பற்றிச் சிந்திக்கும்போது தடுமாறுகிறார்கள். அப்போது அவர்கள் செருக்கு எங்கோ ஓடி ஒளிந்துகொள்கிறது. உடல் வலிமை பெற்றவர்கள் ஆண்டு முதிர முதிர அந்தவலிமையை இழந்துவிடுகிறார்கள். அப்போது முன்பு இருநத மிடுக்கு இருப்பதில்லை. மிகப் பெரிய செல்வரை உற்ற தோழராகக் கொண்டவர்கள் அந்தச் செல்வர் மனம் மாறினாலும், அவருடைய செல்வம் குறைந்தாலும், அவர் உலக வாழ்வை நீததாலும் அவரால் பெறும் நன்



மையை இழந்து வாடுகிறார்கள். எப்போதும் ஒரே நிலையில் செருக்கோடும் மிடுக்கோடும் வாழ்பவர்களைக் காண்வதில்லை. அப்படி இருக்க நீங்கள் மட்டும் செருக்குக் குலையாத சிந்தையுடன் இருக்கிறீர்களே; அது எப்படி?''

''அதற்குக் காரணம் இதுவாக இருக்குமோ?''

**இது கொலோ**
**சிந்தையார்க்கு உள்ள செருக்கு?**

''எது?''

''எம் தந்தையாராகிய சிவபெருமானுக்கு ஆளாகப் பெற்ற வலிமையாகத்தான் இருக்க வேண்டும்.''

''எவ்வாறு ஆட்பட்டீர்கள்?''

''உலகத்தில் மற்றவர்களைப் பற்றினால் பயன் ஒன்றும் இல்லை என்பதை அநுபவத்தில் அறிந்து, வேறு ஏதும் பற்றின்றி, எம் தந்தையாரைப் பற்றிக்கொண்டு ஆளாக நின்று தொண்டு செய்யப்பெற்றோம். அதையன்றி வேறு வழியில்லை என்று துணிந்து, அந்த அடிமைத் தன்மையில் என்றும் பிறழாது நிற்கிறோம். இதுதானே இந்தச் சிந்தையாருக்கு உண்டான செருக்குக்குக் காரணம்?''

**துணிந்து என்றும்**
**எந்தையார்க்கு ஆட்செய்யப்**
**பெற்ற இதுகோலோ**
**சிந்தையார்க்கு உள்ள செருக்கு?**

''எவ்வாறு ஆட்பட்டுத் தொண்டு செய்தீர்கள்?''

''படர்ந்த சடையை உடைய எம் தந்தையாரை அணுகினோம். அவரைப் பணிந்தோம். அவருடைய திருவடிகளை மலரால் அருச்சித்து மலர்மாலைகளை வேய்ந்து அலங்காரம் செய்தோம்.''

**பணிந்தும் படர்சடையான்**
**பாதங்கள் போதால்**
**அணிந்தும்.**

''பிறகு!''

''இவ்வாறு இறைவனை வழிபட்டதோடு நிற்கவில்லை. இந்த மனம் ஒரு சமயம் இருப்பதுபோல் மற்றொரு சமயம் இருப்பதில்லை, இறைவன் திருவடிகளைப் போதால் புனையும்போது மனம் தெளிவாக இருக்கிறது. வேறு சில சமயங்களில் இது சோர்வடைகிறது. தொடர்ந்து இறையுணர்வோடு இருப்பதற்கு என்ன வழி என்று பார்த்தோம். ஒரு வழி கிடைத்தது.''

''என்ன வழி அது?''

''மனித மனம் சார்பினால் உயர்வதும் தாழ்வதும் செய்கிறது. எந்தச் சூழ்நிலையில் நாம் இருக்கிறோமோ. அந்தச் சூழ்நிலைக்கு ஏற்றபடி இது மாறுகிறது. பெரிய விளக்கை ஏற்றி நடுத்தெருவில் வைத்தால் காற்றினால் அலைப்

புண்டு அது அணைந்து போகும். எவ்வளவு எண்ணெய் விட்டிருந்தாலும் காற்றின் தாக்குதலுக்கு எதிரே அந்த விளக்கு நிற்ப தில்லை. இந்த உலகத்தில் எத்தனையோ மாயாசக்திகள் இருக்கின்றன. தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகாமல் அவை தடுக்கின்றன. ஒருகால் கடவுள் உணர்வு சிந்தையில் எழுந்தாலும் உலக விவகாரங் கள் அந்த உணர்வைக் குலைத்து விடு கின்றன. ஆகையால் அதற்குரிய பாது காப்பைத் தேடிக்கொண்டாலன்றிக் கடவு ளுணர்வு நிலையாக நில்லாது.''

"நீங்கள் எந்தப் பாதுகாப்பை நாடினீர் கள் ?''

"நல்லோர் இணக்கத்தை நாடினோம். இறைவனுடைய திருவடிக்கு அருச்சனை செய்து வாழும் தொண்டர் கூட்டத்தில் சேர்ந்தோம். அவர்களைத் துதித்து அவர்கள் கூட்டத்தில் ஒருவராகச் சேர்ந்து கொண் டோம். அவர்களோடு சார்ந்தமையால் எம்மை அறியாமலே நல்ல பழக் கங்கள் எம்மிடம் உண்டாயின. சுற்றுச் சூழ்நிலை முழுதும் ஆண்டவனுக்கு அடிமை யாகித் தொண்டு புரியும் இயல்பே அமைந்த தனால், வேறு எந்த நினைவும் இடையே புகு வதற்கு இடம் இல்லாமல் போயிற்று. அருமையான செல்வத்தைப் பெற்ற ஒருவன், அது பறிபோய்விடுமோ என்ற அச்சத்தால் தக்க பாதுகாப்புள்ள கோட்டைக்குள்ளே அதை வைத்து, அங்குள்ள காவலர்கள் அதற்குப் பாதுகாப்பாக இருக்கும் திறத்தை அறிந்து, இனி நமக்குக் கவலை இல்லை என்று இருப்பதைப் போல இருக்கிறோம்.''

"உங்கள் அடிமைத் தன்மை மாறுமல் இருக்க அவர்கள் என்ன செய்தார்கள் ?''

"அவர்கள் ஒன்றும் செய்ய வேண்டிய தில்லை. அவர்களிடையே நாம் இருப்பதே போதுமானது. சூரியன் ஒளி நன்றாக வீசும் இடத்தில் இருள் புகுவதற்கு ஏது இல்லை. எந்தையார்க்கு ஆட் செய்யப் பெற்ற தொண்டர்களுடைய கூட்டம் பல மான கோட்டையைப் போன்றது. பக்தி உணர்வாகிய செல்வத்தை அங்கே புகுந்து யாரும் குலைக்க முடியாது. அவ்வாறு இறைவன் பாதப் போதை அருச்சித்து ஆட் பட்டு வாழும் தொண்டர்களைத் துதித்து அவர்கள் கூட்டத்திலே கலந்துவிட்டோம். ஆகவே இனிப்பயம் இல்லை. எம்முடைய அடிமைப் பண்பு மாறுது; குலையாது இந்த உறுதியான நிலையில் பாதுகாப்பாக இருப்ப தனால் போலும் எம்முடைய சிந்தையார் செருக்குடன் இருக்கிறுர் !''

பணிந்தும், படர்சடையான்
பாதங்கள் போதால்
அணிந்தும், அணிந்தவரை
ஏத்தத்—துணிந்து என்றும்
எந்தையார்க்கு ஆட்செய்யப்
பெற்ற இதுகொலோ
சிந்தையார்க் குள்ள செருக்கு !

படர்ந்த சடையை உடையவன் பாதங் களைப் பணிந்தும், பிறகு அந்தத் திருவடிகளை அலரும் பருவத்துள்ள மலர்களால் அலங் கரித்தும், அப்பால் அவ்வாறு அலங்கரித்த அன்பர்களை ஏத்துவதே நல்ல நெறியென்று துணிந்து நின்றோம்; அப்பால் என்றும் பிறழாமல் எம் தந்தையாராகிய சிவபெருமா னுக்கு ஆளாகித் தொண்டு செய்யப் பெற் றோம். அவ்வாறு பெற்ற இந்த நிலைதானே, எம்முடைய சிந்தையாருக்கு உள்ள செருக் குக்குக் காரணம்?

படர்சடையான் பாதங்கள் பணிந்தும் போதால் அணிந்தும் என்று கூட்டுக; இடை நிலை விளக்கு. படர் சடையான்—விரிந்த சடையை உடையவன். படர்சடையையும் பாதங்களையும் கூறியதனால் அவன் திருக் கோலம் முழுவதும் கண்டவராயிற்று. கேசாதி பாதக் காட்சி கிட்டியது. போது- அலரும் பருவத்துள்ள பேரரும்பு. "உன்னைச் சிங்காரித்து உன் அழகைப் பாராமல், என்னைச்சிங் காரித் திருந்தேன் பராபரமே!'' என்பார் தாயுமானவர். இறைவ னுக்கு அலங்காரம் செய்து கண்குளிரக் கண்டு மகிழ்வது அவனுக்கு ஆட்செய்யப் பெற்றவர்களின் இயல்பு.

பணிந்தபோது பக்தி அரும்பியது; இறைவன பாதங்களை அர்ச்சித்தபோது அது

அலர்ந்தது. அணிந்தவரை ஏத்தத் துணிந்த போது அது காயாயிற்று. அவர்களோடு சேர்ந்து ஆட்செய்யப் பெற்றபோது அது கனிந்தது.

முதலில் நெருக்கமின்றி இருந்தமைபால் படர் சடையான் என்று ஒருமையால் சொன்னவர், தொண்டர் கூட்டத்தோடு சென்று நெருங்கி ஒட்டுறவு இறுகவே, தமக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பின் முதிர்ச்சியினால் 'எந்தையார்' என்று உறவின் முறையைப் பன்மை வாசகத்தில் சொன்னார். ஆட்செய்யப் பெற்ற இது—அடிமையாக நின்று தொண்டு செய்யும் பேறுபெற்ற இந்த இயல்பு இது கொலோ: ஓ, வினாப் பொருளைத் தருதலின், கொல், அசையாக நின்றது. இது என்றது ஆட்செய்யப் பெற்றதைக் குறித்தது. இதுதான என்று சொல்லாமல் இது கொலோ என்றது ஐயத்தால் சொன்னதன்று; இதுதான் என்றால் அகங்காரம் தொனிக்கும் அதனால் 'இதனால் தானே' என்று பராமுகமாகச் சொன்னார்.

சிந்தையார் என்றது, 'இத்தகைய நன் மனத்தைப் பெற்றோமே' என்ற உவகையால் அஃறிணை ஒருமையை உயர்திணைப் பன்மை வாய்பாட்டால் குறித்தபடி. தமக்குச் செருக்கு உண்டானதாகச் சொல்லாமல் அதனைச் சிந்தையின் மேலேற்றிச் சொன்னார், பணிவு காரணமாக.

செருக்கு—செருக்குக்குக் காரணம்; ஆகு பெயர்.

'படர்சடையான் பாதங்கள் பணிந்தும், அணிந்தும், துணிந்து ஆட்செய்யப் பெற்ற இது கொலோ உள்ள செருக்கு' என்று இணைத்துப் பொருள் கொள்க.

படர்சடையான் என்றதன் பின் எந்தையார் என்று சொன்னதில் அவ்வெந்தையார் என்ற சுட்டுத் தொக்கு நின்றது.

இறைவனுடைய அடியார்கள் எதனாலும் தளர்வின்றிப் பெருமிதத்தோடு இருப்பார்கள் என்பது, இதனாற் பெறப்படும் கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் உள்ள 79-ஆவது பாடல் இது.

---

# தியாகராஜர் கண்ட ராமர்

வன வாழ்க்கைத் தொடக்கத்தில், ராமர், சீதை, லட்சுமணர் ஆகிய மூவரும் கவரிமான் உலவும் ஒரு காட்டை அடைகின்றனர். அந்த மிருகம் ஒன்றைக் கண்டதும் சீதை அதன் வசீகரமான வாலின்மீது ஆசை கொண்டாள். வனவாசத்தின் நினைவாக அந்தச் சாமரம் ஒன்றை எடுத்து வைத்துக்கொள்ள விரும்பினாள். அவள் மனதில் எழுந்த எண்ணத்தை, முகத்தைப் பார்த்தே ராமர் புரிந்துகொண்டார்.

காட்டு வாழ்க்கையைக் கனவிலும் எண்ணியிராத மாதின் ஆசையைப் பூர்த்தி செய்யும் பொருட்டு ராமர் அந்தக் கணமே வில்லில் நாணேற்றிக் கவரிமானின் வாலைத் துண்டிப்பதற்காக அம்பை விடுத்தார்.

ராமபாணம் தன்னருகில் வந்ததும் மிருகம் தத்துவஞானம் பெற்றுத் தனக்குத் தானே விவாதித்தது: 'வால் அறுந்தால் என் இனத்தாரின் ஏளனத்திற்குத்தான் ஆளாவேன். என்னையே ராமபாணத்திற்குத் தந்துவிட்டால் என்ன? உடனே மோட்சம் கிட்டுமே!' ராம பாணம் வாலை நெருங்கிய கணத்தில் சட்டெனத் திரும்பித் தன் கழுத்தை அம்புக்கு முன் நீட்டியது.

தொலைவிலிருந்து கவரிமானின் செயலைக் கண்ணுற்ற ராமர் திடுக்கிட்டார். தமக்குள், "என் அருமைச் *சீதையின்* பொருட்டும் ஒரு மிருகத்தை வதைக்கலாகாது அகிம்சையே பரம தர்மம்" என்று நினைத்துக்கொண்டார். ஆனால் ராமபாணம வீண் போகாது. ஆகவே, ராமர் உடனே மற்றொரு பாணத்தைத் தொடுக்க, அது மின்னல் வேகத்தில் பாய்ந்து முதல் பாணத்தைத் தடுத்துத் தள்ளி, அந்த மானுக்கும் உயிர்ப்பிச்சை அளித்தது.

'வாசாம கோசரமே மனஸா' — சரணம் (கைகவசி ராகம்) என்ற கீர்த்தனத்தில் தியாகராஜர் மேற்கண்ட நிகழ்ச்சியைச் சித்தரித்துள்ளார்.

— பி. ஸாம்பமூர்த்தி



# பர்பரிகனின் வதம்

நரேந்திரன்

பர்பரிகன் பீமசேனனின் பேரப்பிள்ளை; கடோத்கசனின் மகன். மௌர்வி என்பவளைக் கடோத்கசன் தன் புத்தியாலும் ஆயுதபலத்தாலும் சாஸ்திர அறிவாலும் வென்று மணந்துகொண்டான். எனவே மௌர்வியின் மகனான பர்பரிகன் இயற்கையிலேயே மிகவும் பலசாலியாகத் திகழ்ந்ததில் வியப்பில்லை.

ஒரு தடவை பர்பரிகன் தன்னுடைய எளிய ஒரு யுத்த தந்திரத்தை உபயோகித்து மகாபராக்கிரமசாலியான பீமசேனனையே தோற்கடித்தவன்.

பாண்டவர் வனவாசம் தொடங்கிய பதின்மூன்ருவது ஆண்டு முடிந்தது. அப்போது எல்லா அரசர்களும் யுத்தம் செய்வதற்காக உபப்லாவ்யம் என்ற இடத்தில் கூடினர். அந்த இடத்திலிருந்து மாவீரர்களான பாண்டவர்கள் புறப்பட்டுக் குருக்ஷேத்திரத்தை வந்தடைந்தனர். அவர்கள் வருவதற்கு முன்பே கௌரவர் முதலானோர் அங்கு வந்துவிட்டிருந்தனர்.

பீஷ்மர் இருசார்பிலும் போரிடப்போகும் வீரர்களையும் மகாவீரர்களையும் எண்ணினர். இதைப் பற்றிய விவரங்கள் அனைத்தையும் ஒற்றர்கள் மூலம் யுதிட்டிரர் அறிந்துகொண்டார். உடனே கண்ணபிரானிடம் சென்று அவர், "கேசவா! பிதாமகரான பீஷ்மரும் கிருபாசார்யரும் ஒரு மாதத்திற்குள் எங்களை அழித்துவிடுவதாகப் பிரதிக்ஞை செய்துள்ளார்கள். துரோணர் பதினைந்து நாட்களிலும், அச்வத்தாமன் பத்து நாட்களிலும், என்னை எப்பொழுதும் பயத்திற்கு ஆளாக்கும் கர்ணன் ஆறே நாட்களிலும் சேனையோடு பாண்டவர்களை அழித்துவிடுவதாக அறிவித்துள்ளார்களே! தேவகிநந்தனு! நம் பக்கம் இவர்களுக்கு எதிராக இத்தனை சாமர்த்தியத்துடன் போரிடக்கூடியவர் யாரேனும் இருக்கிருர்களா?" என்று கேட்டார்.

மகாராஜா யுதிட்டிரர் இவ்விதம் சொல்வதைக்கேட்ட அர்ஜுனன் அவரை நோக்கி, "மகாராஜா! நீங்கள் கேள்விப்பட்டதெல்லாம் பீமசேனன் போன்ற மகாவீரர்களின் விஷயத்தில் ஒருபோதும் பொருந்தாது. ஏனென்ருல் உங்கள் பக்கம் போரிடும் அரசர்களில்கூட அசகாயசூரர்களும், எமனையே வென்று ஏப்பம்விடக் கூடியவர்களும் இருக்கிருர்கள். ஸாத்யகி, பீமசேனன், துருபதன், கடோத்கசன், விராடன், திருஷ்டத்யும்னன் ஆகியவர்களை யார் வெல்ல முடியும்? எப்போதும் எவராலும் வெல்லமுடியாத பகவான் ஸ்ரீகிருஷ்ணர் தங்கள் பக்கம் இருக்கிருர். இந்த வீரர்களில் ஒவ்வொருவரும் கௌரவரது சேனை முழுவதையும் வெற்றி கொள்ளும் திறமை பெற்றவர்கள். இது போகட்டும்; கிழவர்களான பீஷ்மரையும் துரோணரையும் கண்டா தங்களுக்குப் பயமாக இருக்கிறது? நான் இவ்வளவு கூறியபிறகும் தங்களுக்குத் திருப்தி உண்டாகாவிட்டால் இதோ நான் கூறும் சபதத்தைக் கேளுங்கள்: நான் தனித்தே சண்டையிட்டு ஒரே நாளில் கௌரவர்களை வென்று விடுவேன்" என்று கூறினுன்.

இவ்வாறு அர்ஜுனன் கூறியதைக் கேட்ட பர்பரிகன், "ஐயோ! மகாத்மா அர்ஜுனர் கூறியதைக் கேட்க என்னுல் பொறுக்கமுடியவில்லையே! ஆகவே நான் கூறுவது யாதெனில் அர்ஜுனன் கிருஷ்ணன் ஆகியோருடன் நீங்கள் அனைவரும் ஓர் இடத்தில் நின்றுகொண்டிருங்கள். நான் ஒரு முகூர்த்த நேரத்திற்குள் கௌரவ சேனையை எமனுல

கத்திற்கு அனுப்பிவிட்டு வருகிறேன். சித்தாம்பிகை எனக்கு அளித்த இந்த வாளையும், திவ்யமான வில் அம்புகளையும் பாருங்கள்! இவற்றைக் கொண்டு கௌரவர்களை அழிக்கும் வேலையை மிகவும் எளிதாக முடிப்பேன்!'' என்று கூறினான்.

பர்பரிகன் கூறியதைக் கேட்ட க்ஷத்திரியர் அனைவரும் ஆச்சரியமடைந்தனர். அர்ஜுனன் வெட்கமடைந்து கிருஷ்ணனின் பக்கம் பார்த்தான்.

கிருஷ்ணர் உடனே அர்ஜுனனிடம், ''பார்த்தா! பர்பரிகன் தன் திறமைக்கு ஏற்ற பதிலைத்தான் கூறியிருக்கிறான். இவனைப் பற்றிய பல அற்புதமான விஷயங்களை நானே கேள்விப்பட்டிருக்கிறேன். முதன் முதலில் இவன் பாதாள உலகம் சென்று ஒன்பது கோடி அரக்கர்களை ஒரே கணத்தில் கொன்றுவிட்டான்'' என்று கூறினார்.

பிறகு பர்பரிகனைப் பார்த்து, ''குழந்தாய்! நீ பீஷ்மர், துரோணர், கர்ணன் போன்ற மிகப் பெரிய வீரர்களால் நடத்தப்படும் சேனையை எவ்வாறு இவ்வளவு குறுகிய காலத்திற்குள் வெல்லமுடியும் என்று கூறுகிறாய்? இவர்களை வெற்றிகொள்வது என்பது அந்த மகேசனாலும் முடியாத காரியம் அல்லவா? நீ இவ்விதம் பேசுவதற்கு உன்னிடம் அப்படிப்பட்ட என்ன உபாயம் இருக்கிறது? நான் உன் வார்த்தைகளை எவ்வாறு நம்புவேன்?'' என்று கேட்டார்.

வாசுதேவன் இவ்வாறு கேட்டதும் பர்பரிகன் தன் வில்லில் அம்பை ஏற்றினான். அந்த அம்பின் நுனியில் சிவப்பு நிறச் சாம்பலை நிரப்பி, நாணைக் காதுவரை இழுத்து அம்பை விட்டான். அந்த அம்பினின்றும் சாம்பர் வெளிப்பட்டு, இரண்டுபக்கச் சேனைகளிலும் உள்ளவர்களுடைய உயிர் நிலைகளில் பட்டது. அந்தச் சாம்பல் படாதவர்கள் யார் என்றால் பஞ்சபாண்டவர்கள், கிருபர், அச்வத்தாமன் ஆகியவர்கள் மட்டுமே.

இப்பொழுது பர்பரிகன், ''பார்த்தீர்கள் அல்லவா? நான் இப்போது செய்த காரியத்திலிருந்து, மரணமடைய வேண்டிய வீரர்களின் உயிர்நிலைகளைத் தெரிந்துகொண்டுவிட்டேன். பிறகென்ன? இரண்டே நாழிகையில் அனைவரையும் கொன்று போட்டுவிடுவேன்'' என்றான்.

இதைப் பார்த்த யுதிட்டிரர் மிகவும் ஆச்சரியப்பட்டார். மற்றவர் அனைவரும், ''பர்பரிகன் வாழ்க!''என்று கோஷமிட்டனர். இதனால் அங்கு ஒரே கூச்சலாக இருந்தது.

இதற்குள் ஸ்ரீ கிருஷ்ணர் தம் சக்ராயுதத்தால் பர்பரிகனின் தலையை வெட்டி வீழ்த்தினார். இதனால் பீமசேனன், கடோத்கசன் ஆகியவர்கள் மிகவும் கலக்கமுற்றனர். அப்போது அங்கே சித்தாம்பிகை போன்ற தேவிகள் வந்தனர். அவர்கள் பர்பரிகன் விஷயத்தில் கிருஷ்ணன் செய்தது ஏதும் தவறில்லை என்றனர்.

பர்பரிகன் முற்பிறப்பில் சூர்யவர்ச்சஸ் என்ற யக்ஷனாக இருந்தவன். ஒரு சமயம் பூமிதேவி தன் பாரம் தாங்க முடியாமல் மேருமலையிடம் முறையிட்டு அழுதாள். அப்போது இவன், ''நான் ஒருவனே தனியே சென்று அரக்கர்களை அழித்துவிட்டு வருகிறேன். நான் இருக்கும்போது தேவர்கள் கூடப் பூமியில் அவதரிக்கவேண்டிய அவசியம் இல்லை'' என்றான்.

இதனால் கோபமடைந்த பிரம்மதேவர் ''முட்டாளே! நீ புத்தியில்லாமல் இவ்வாறு அசட்டுத் துணிச்சல் கொண்டுள்ளாய். எனவே பூமியில் எப்போது பூமிதேவியின் பாரம் குறைவதற்காக யுத்தம் தொடங்குமோ அப்போது ஸ்ரீ கிருஷ்ணபகவானது கையால் உன் உடல் நாசமடையும்'' என்று கூறினார்.

ஸ்ரீ கிருஷ்ணர் சண்டிகையைப் பார்த்து, ''பர்பரிகனின் தலையை அமிர்தத்தில் நனை. ராகுவின் தலையைப்போல் அது என்றும் இளமையாகவும் அமரத்துவம் பெற்றும் இருக்கட்டும்'' என்றார். சண்டிதேவி அவ்வாறே செய்தாள்.

உயிர்பெற்ற பர்பரிகனின் தலை கிருஷ்ண பகவானை நமஸ்கரித்து. ''யுத்தத்தை நான் பார்க்கவேண்டும், சுவாமி!'' என்று வேண்டிக் கொண்டது. பகவான் அந்தத் தலையை ஒரு மலையுச்சியில் வைத்துவிட்டார்.

பாரதப்போர் முடிந்தது. பீமன் முதலியோர் தத்தம் வீரதீரப் பிரதாபங்களை அளந்து கொண்டிருந்தனர். தம்மைப் பற்றியே ஒவ்வொருவரும் புகழ்ந்துகொண்டிருந்தனர். அப்போது பர்பரிகனின் தலையிடம் இதைப் பற்றிக் கேட்பது என்று தீர்மானித்து, அதே போன்று அனைவரும் அவனிடம் கேட்டனர்.

அதற்கு அவன், "எதிரிகளுடன் ஒரே ஒருவர் மட்டுமே போரிடுவதை நான் கண்டேன். அந்த திவ்ய புருஷருக்கு இடப் புறம் ஐந்து முகங்கள் இருந்தன. அவற்றில் திரிசூலத்தையும் ஆயுதங்களையும் வைத்துக் கொண்டிருந்தார். வலப்பக்கத்தில் ஒரு முகமும் நான்கு புஜங்களும் இருந்தன. அவற்றில் சக்கரம் முதலிய ஆயுதங்கள் இருந்தன. இடப்பக்கம் தலை ஜடையில் அழகு பெற்றிருந்தது. வலப்பக்கம் மகுடம் அலங்கரித்துக்கொண்டிருந்தது. இடப்பக்க உடல் முழுவதும் சாம்பல்பூசப்பட்டிருந்தது இடப்பக்கம் சந்திரகலை பிரகாசித்துக்கொண்டிருந்தது. வலப்பக்கம் கௌஸ்துபமணி ஒளிவீசிக்கொண்டிருந்தது. அந்த 'ருத்ர-விஷ்ணு' உருவமே கௌரவ சேனை முழுவதையும் எதிர்த்துப் போரிட்டுக்கொண்டிருந்ததைக் கண்டேன். அந்த ருத்ர விஷ்ணு ஒருவரைத் தவிர வேறு எவரும் சேனை முழுவதையும் அழித்ததாக நான் பார்க்கவில்லை" என்றான்.

அவன் இவ்வாறு சொல்லி முடிந்ததும் விண்ணினின்றும் மலர்மாரி பொழிந்தது. "வாழ்கவாழ்க!" என்ற ஒலியுடன் ஆகாயம் மிகவும் பிரகாசமாக விளங்கியது.

இவற்றையெல்லாம் கேட்டும், நடந்தவற்றைப் பார்த்தும் பீமசேனாதியர் வெட்கத்துடன் தலை குனிந்துகொண்டு அந்த இடத்தைவிட்டு அகன்றனர்.

—மாகேச்வர காண்டம்,
குமாரிக் காண்டம், 61-62

---



## சிவாலயங்கள் உணர்த்தும் தத்துவம்

கோயில் (கோ இல்) என்பது அரசன் இருக்கும் இடமாகிய அரண்மனைக்கும், உயிர்களின் தலைவனாகிய கடவுள் எழுந்தருளியிருக்கும் இடங்களுக்கும் வழங்கும் சொல்லாகும்.

ஆன்மாக்கள் (உயிர்கள்) வசிக்கும் இடமாதலால் ஆலயம் எனப்பட்டது. [ஆ+லயம்]

கடவுள் எழுந்தருளியுள்ள கோயில்களைப் பல வகையாகப் பல காலங்களில் அரசர்கள் கட்டி வைத்தார்கள். அவ்விதம் அவர்கள் ஆலயங்களை ஏன் கட்டினார்கள் என்று சற்று ஆராய்ந்து பார்க்கலாம்.

உடம்பிலுள்ள உயிர் உடல் முழுவதும் வியாபித்திருப்பினும், ஜாக்ரத் அவஸ்தையிலே விசேஷமாக நிற்பது போலவும், பசுவினிடத்தில் பால் தேகம் எங்கும் செறிந்திருப்பினும் மற்ற இடங்களில் தோன்றாமல் மடியில் ஸ்பரிசித்த மாத்திரத்தில் அதனின்றும் தோன்றுவது போலவும், ஆதியும் அந்தமும் இல்லாத ஆண்டவன் சர்வ வியாபகராய் இருப்பினும், ஆலயங்களிலே தயிரில் நெய் போல விளங்கியும், மற்ற இடங்களில் பாலில் நெய் போல விளங்காது நின்றும் அருள் செய்வார் என்பது ஆலயங்களின் தத்துவத்தையும அவசியத்தையும் உணர்த்தும்.

ஆகவே, பேரானந்தப் பிறவா வீடு அடைய விரும்புவோர் யாவரும் சிவஸ்தலங்களை அடைந்து, ஆங்காங்கு உள்ள தீர்த்தங்களில் மூழ்கித் திருக்கோயிலினுள் சென்று ஆங்கு மெய்யன்புடன் செய்ய வேண்டிய

வழிபாடு முதலியவற்றைச் செவ்வனே செய்து உண்மை விளங்கப் பெற வேண்டும். பின்னர் அவற்றையெல்லாம் கண்டு ஞான பூசையைச் செய்தல் வேண்டும். புறத்துள்ள சிவாலயம் முதலியவை, சிவயோக சாமர்த்தியமில்லாதவர்க்கு உண்மை விளங்க உபாயமாக வைக்கப்பட்டனவே ஆகும்.

இதனையே சிவஞானசித்தியார் என்ற ஞானசாத்திரம் பின்வருமாறு அருளியுள்ளது :—

திருக்கோயி லுள்ளிருக்கும்
திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச்
சிவனுறைவன் அங்கே
உருக்கோலி மந்திரத்தா
லேநினையு மவர்க்கும்
உளனெங்கு மிலனிங்கு
முளனென் பவாக்கும்.
இருப்பாய வடிவாகி
இந்தனத்தி னெரிபோல்
மந்திரத்தின் வந்துதித்தே
இருஞ்சுரபிக் கெங்கும்
உருக்கான வொண்ணாத
பான்முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல் வெளிப்பிட்
டருளவனன் பர்க்கே,

இத்தகைய புறப்பூசையைவிட விசேஷமானது என்று ஞானிகள் மானஸ பூசை செய்வார்கள். அது நம் போன்றவருக்கு எளிதன்று. ஆதலால், நாம் ஆலய வழிபாட்டை முதற்கண் கடைப்பிடித்துப் பின்பு, 'இங்குள்ள ஈசன் அங்குள்ளான்; அங்குள்ள ஈசன் இங்குள்ளான் ; எங்குமுள்ளான்' என்ற உணர்வும் பக்குவமும் வந்தபின், ஆலய வழிபாடு நம்மையறியாமலேயே நம்மை விட்டு அகலும். நாம் அதனை அகற்றுவதற்கு ஒருபோதும்தகுதியுடையவர்களல்ல. சாதாரண மக்கள், அறிவுடையவர்கள் போல நடித்து, ஆலய வழிபாடு செய்யும் மக்களை ஏளனம் செய்து வருவதைக்கண்டு நாம் ஒரு போதும் ஆலய வழிபாட்டைப் புறகணித்தல் கூடாது.

ஆண்டவனை நேரில் கண்ட நம் சமயசாரிய மூர்த்திகளே அநேக ஆயிரக்கணக்கான அடியார் கூட்டத்துடன் ஸ்தல யாத்திரை செய்து ஆலயங்களில் பெருமானைக் கண்டு வணங்கி வழிபட்டார்கள் என்று நூல்கள் கூறுகின்றன. அவர்கள் எதற்காக ஆலய வழிபாட்டை மேற்கொண்டார்கள் ? அவர்கள் இறைவனை நேரில் புறக்கண்களால் கண்டார்கள்; அவனுடன் அளவளாவினார்கள்; அவன் அருளைப் பெற்று அவன் செய்யும் பல அற்புதங்களையும் நிகழ்த்தியுள்ளார்கள் என்றால் ஒன்றுக்கும் பற்றாத நாமா ஆலய வழிபாட்டைக் கைவிடுவது ? விட்டால் நமக்கு உய்வே இல்லை.

இப்படிச் சைவாகமங்களின் விதிப்படி கட்டப்பெற்ற ஆலயங்களின் அமைப்பைப் பற்றி நாம் அவசியம் சிந்திக்க வேண்டும்.

ஆலயங்கள் இருவகைப்படும். சரீரப் பிரஸ்தாரம், இருதயப்பிரஸ்தாரம் என்ற பெயர்களால் அவை வழங்கப் பெறுகின்றன. முதலாவது—சரீரத்தை விரித்துக் குறிப்பது ; பின்னையது—இருதயத்தை விரித்துக் குறிப்பது.

ஒவ்வோர் ஆலயத்திலும் பெரும்பாலும் கர்ப்பக்கிருகம், அர்த்தமண்டபம், மகா மண்டபம், ஸ்நானமண்டபம், அலங்கார மண்டபம், சபாமண்டபம் என்ற ஆறு மண்டபங்கள் இருக்கும். இவை நம் உடம்பிலுள்ள ஆறு ஆதார ஸ்தானங்களைக் குறிக்கும். அவையாவன — மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்பன. சில ஆலயங்களிலுள்ள ஆயிரங்கால் மண்டபம் ஆயிரம் இதழ்களையுடைய கமலத்தைக் குறிக்கும். (இதற்கு உன்மனி என்று பெயர்.) பக்கத்தில் இருக்கும் தீர்த்தம் நம் மூளையின் மேற்புறத்துள்ள சத்திய புஷ்கரிணி என்பதைக் குறிக்கும்.

இனி, ஆலயத்திலுள்ள பிரகாரங்கள்—ஒன்று, மூன்று, ஐந்து, ஏழு என்று இருக்கும். ஏழு பிரகாரங்கள் உள்ளத்தின் தத்துவம், உடம்பிலுள்ள ரஸம், ரத்தம், மாமிசம், மேதை, எலும்பு, மஜ்ஜை, சுக்கிலம் என்னும் ஏழு தாதுக்களைக் குறிக்கும் என்று சொல்லப்படுகிறது. ஐந்து பிராகாரங்கள் இருப்பின், அவை உடம்பில் காணப்படும் ஸ்தூல தேகம் எனப்படும் அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம்,

விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்ற ஐந்தாக அறியப்படும். மூன்று பிராகாரங்கள் உள்ளவை ஸ்தூல, சூட்சும, காரண தேகங்களைக் குறிக்கும். ஒரே ஒரு பிராகாரம் இருந்தால் அது மேற்கூறிய எல்லாப் பிராகாரங்களையும் குறிக்கும்.

ஆலயங்களில் சிவலிங்கம் முதலிய திருமேனிகளைத் தெரியவொட்டாமல் கதவுகள் மறைத்து நிற்கின்றன. காமம், கோபம், மதம், மாச்சரியம், அகங்காரம் என்பன தோன்றுவதற்குக் காரணமாகிய அவித்தையைக் கதவு உணர்த்துகிறது. சிவத்தைத் தெரியவொட்டாமல் மறைத்து நிற்கும் அநாதியான மாயைத் திரை நீங்கப்பெற்றதும் சிவதரிசனம் என்ற வீடுபேறு உண்டாகிறது.

ஆலயங்களில் சிறப்பாகச் சிதம்பரம் முதலிய முக்கியமான ஸ்தலங்களிலுள்ள கோயில்களில் பல சபைகள் இருப்பதை நாம் காண்கிறோம். இவை எதனைக் குறிக்கின்றன என்றால், இராச சபை அன்னமய கோசமாகவும், தேவசபை பிராணமய கோசமாகவும், நிருத்த சபை மனோமய கோசமாகவும், கனகசபை விஞ்ஞானமய கோசமாகவும், சிற்சபை ஆனந்தமய கோசமாகவும் கருதப்பெறுகின்றன.

கோயிலுக்கு முன்வாயிலிலுள்ள ஸ்தூபி (கோபுரம்) இருதய கமலாகாரமாக விளங்கும். இதனைக் கீழ் இடம் பிருதிவி தத்துவமாகவும், அதற்கு மேல் நாளம் அன்பு முதலிய 23 தத்துவங்களையும், நாளத்து முட்கள் அமேரேசன் முதல் சிகேதன் ஈறுகவுள்ள 72 புவனங்களாகவும், எட்டு இதழ்கள் எட்டுத் தத்துவங்களாகவும், அறுபத்து நான்காகிய கேசர வடிவங்கள், ஈசுரம், சதாசிவம் என்ற இரண்டு தத்துவமாகவும், பூ நாளம் என்பவற்றின் நுனி அடிகளிற் பொருந்திய முடிச்சு மாயையாகவும், பொகுட்டு வடிவம் சக்தி தத்துவமாகவும், கற்பிக்கப்பட்ட இருதயபங்கய ஆசனத்தில் முன்னைப் பழம்பொருளுக்கும் முன்னைப் பழம்பொருளாக உள்ள சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் உண்மை அறியப்படும்.

சரீரத்திலே பிரம்மரந்திர மத்திய கமலத் துவாரமே உத்தர கோபுர வாயிலாகவும், பாதப் பெருவிரல்களின் முடிவுகளும், கை நடுவிரல்களின் அந்தங்களும, குத மலத்துவாரமும் தெற்குக் கோபுர வாயிலாகவும், ஞானக்கினியம் ச புருவமத்தியமே அந்தராள கோபுர வாயிலாகவும், உந்தி ஸ்தானமே பலிபீடமாகவும், இருதயமே துவஜஸ்தம்பதாகவும், பஞ்சகோச அந்தக்கரண புருடனுகு ் கண்டஸ்தானமே நந்தி யாகவும் சிவயோகிகள் அறிவார்கள்.

துவஜஸ்தம்பம் (கொடிமரம்) தேவ பிம்பத்திற்கு நேராக நிறுத்தப்பட்டிருக்கிறது. ஸதம்பத்தைப் போலச் சரீரம் நேராக இருந்து பிரகாசிக்கும். இடை, பிங்கலை என்ற இரண்டு நாடியின் வழியே போய்த் திரும்பவும் பிராணவாயுவை நடுநாடியில் நிறுத்திச் சிறிதும் அசையாமல் தியானிக்கும் போது பிராணவாயு நிற்கும். அது நிற்க மனமும், அது நிற்க ஐம்பொறிகளும், அவை நிற்பதாலே பிரபஞ்சமும் தோன்றாமல் இருக்க, பரமானந்த சொரூபமாகிய பரசிவம் தரிசனமாகும் என்பதை ஆன்றோர் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஆலயங்களிலுள்ள சுவாமி சந்நிதிக்கு முன்னுள்ள பலிபீடம் பத்திரலிங்கமாகவும், ஸ்தூபி ஸ்தூல லிங்கமாகவும், சிவலிங்கம் சூட்சுமலிங்கமாகவும் கொள்ளப்படும். சிவலிங்கம் என்னும் சொல்லுக்கு 'லிங் = லயம், கம் = தோற்றம்' என்று பொருள் கொண்டு, உலகமும் திருமால் முதலிய உயிர்த் தொகைகளும் ஒடுங்குவதற்கு இடமாக உள்ளது சிவலிங்கம் என்பர். சுருங்கக் கூறின், சிவலிங்கம் என்பது சிவமேயாகும்.

சிவலிங்கத்தின் சொரூபம் பிரணவ வடிவமாகக் காணப்படும். அகாரம்—கண்டம், உகாரம்—கோமுகம், மகாரம்—வட்டம் எனவும், அகார வாச்யம்—சிவம், உகார வாச்யம்—சக்தி, மகார வாச்யம்—பரம் எனவும், அகாரம்—நாதம், உகாரம்—விந்து, மகாரம்—கலை எனவும், அதன் வட்டம் ருத்திரபாகம், நடுவின் எட்டு மூலை விஷ்ணு பாகம், கீழ்ப்பகுதியின் அடி நான்கு மூலை பிரம்ம பாகம் எனவும் பலவாறு யோகியர் கூறுவர்.

இந்தக் குறிப்புக்கள் யாவும் யாழ்ப்பாணம் நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் நூலிலிருந்து திரட்டியவையாகும்.

ஆலயங்களிலுள்ள சிவலிங்கமும், அதற்கு நேரே நந்தியும், பலிபீடமும் இருக்கின்றன. இவற்றுள் சிவலிங்கம் பதி எனவும், நந்தி பசு எனவும், பலிபீடம் பாசம் எனவும் கொள்ளப்படும். இவை வேதாகமங்களில் பிரதிபாதிக்கப்படும் பதி, பசு, பாசமாகிய முப்பொருள்களே என்று கொள்ள வேண்டும். இவை மூன்றும் அநாதி நித்யம் என்றும் கூறப்பட்டுள்ளது. இந்த உண்மையைத் திருமூலர் தம் திருமந்திரப் பாடல் ஒன்றில் பின் வருமாறு கூறியுள்ளதை நோக்கவும் :—

ஆய பதிதா னருட்சி லிங்கமாம்
ஆய பசிவு மடலே றெனநிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய அரனிலை யாய்ந்துகொள் வார்க்கே.

சிவாலயங்களிலுள்ள சிவமூர்த்தம் முதலிய வடிவங்களைச் சூழ்ந்து விளங்கும் வட்ட வடிவமாகிய திருவாசி பிரணவரூபமாகக் காணப்படும். அதனல் எல்லா உலகங்களும் எல்லாச் சுருதிகளும் பிரணவத்திடமிருந்து தோன்றி ஒடுங்குகின்றன என்பது பெறப்படும்.

இந்தச் சிவாலயங்களிலே உயிர்த்தொகைகளாகிய மக்கள் தாம் உய்யும்பொருட்டுச் சாஸ்திரங்களில் கூறிய சரியை கிரியை முதலிய தொண்டுகளைச் செய்து பயன் பெறுவர் என்பது கண்கூடு.

இனிச் சிவாலயங்களில் சிவசந்நிதானத்தின்முன் இடப்படும்திரைச்சீலை—மாயமாகிய திரையே சிவத்தை அறியவொட்டாமல் மறைத்திருக்கிறது என்று உணர்ந்து, அதனை அவரது திருவருள் என்னும் கத்தியினல் கீறி, ஞானக்கண் கொண்டு உள்ளபடி தரிசித்தவர்கள் சிவசக்தி அடைவர் என்பதை உணர்த்தும்.

சிவாலயங்களைச் சாட்சாத் சிவபெருமான் என்றே வழிபடவேண்டும் என்பது சித்தாந்த சாத்திரங்களின ஆணை. இதனையே, மெய்கண்ட தேவர் தாம் அருளிய சிவஞான போதம் என்னும் முதனூலில 1'-ஆம் சூத்திரத்தில் வலியுறுத்தியுள்ளார்கள் என்பதும் சிந்திப்பதற்கு உரியது.

செம்மலர் நோன்றாள் சேர வொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.

'நெஞ்சுவிடு தூது' என்ற ஞானநூலிலும் இந்த உண்மை வலியுறுத்தப்பட்டிருப்பதைக் காண்க:—

உற்ற திருநீறும் சிவாலயமும் உள்ளத்துச்
செற்ற புலையற்பாற் செல்லாதே
நற்றவஞ் சேர்
வேடமும் பூசையருள் மெய்ஞ்ஞானம்
நில்லாத
மூடருடன் கூடி முயங்காதே

மக்கள் சிவாலயங்களுக்கு ஆசாரமாக நீராடிவிட்டுத் தோய்த்து உலர்ந்த ஆடைகளை உடுத்துக்கொண்டு, விபூதி ருத்திராட்சம் தரித்துக்கொண்டு, தூய்மையான மனதுடன் சென்று, ஆகம விதிப்படி ஒருமுறை ஆலயத்தை வலம் வந்து, பின்பு கொடிமரத் தண்டை கீழே விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, நந்திதேவரிடம் விடை பெற்றுக்கொண்டு உள்ளே செல்ல வேண்டும். பின்பு விநாயகப்பெருமானை வணங்கவேண்டும். பிறகு அம்பாளைவணங்க வேண்டும். இரண்டாம் முறையாக ஆலயத்தை வலம் வரவேண்டும். அப்போது முருகப்பெருமான், தட்சிணாமூர்த்தி, நடராஜர் நால்வர் பெருமக்கள், இவைபோல உள்ள இடங்களில் அறுபத்துமூன்று நாயன்மார்கள் ஆகியோரை வணங்கிக்கொண்டு ஆலயத்தை மூன்றாவது முறையாக வலம்வந்து, சண்டேசுரரிடம் மெல்லக் கைதட்டி அவரிடம் சிவாலய தரிசன பலனைத் தந்தருளும்படி வேண்டிக்கொண்டு வந்து கொடிமரத்தின் அருகில் வீழ்ந்து வணங்கிப் பின் இருந்து, உள்ளே புறக்கண்ணால் கண்காட்சிகளை நம் கண்களை மூடிக்கொண்டு அகக் கண்கள்முன் கொண்டுவந்து தியானம் செய்து, அவர் அவருக்கு ஆசாரியார் உபதேசித்த முறைப்படி திருஐந்தெழுத்தை விதிப்படி எண்ணித் தரிசனத்தை முடித்துக் கொண்டு வீடு திரும்ப வேண்டும்.

கோயில்களில் வீண் வார்த்தைகளைப் பேசக்கூடாது வேகமாக ஆலயத்தை வலம் வரக்கூடாது. எல்லா மூர்த்திகளின் திருமுன்பும் நின்றுகொண்டு, அவர் அவருக்கு உரிய துதிப்பாடல்களை ஓதி வணங்க வேண்டும். ஆலயத்தை அசுத்தம் செய்யக் கூடாது. கூடிய அளவு ஆலயங்களில் விளக்கேற்றிவைத்துப் புற இருளைப் போக்கினால் ஆண்டவன் நம் அகவிருளைப்போக்கி ஞானத்தைக் கொடுப்பான என்பது உறுதி. இதனையே அப்பர் பெருமானும்,

"விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்" என்று அருளியுள்ளார்.

 

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

'எழுமின், விழிமின், குறிசாரும் வரை நில்லாது செல்மின் !'

தொகுதி 60

சித்தார்த்தி வருட தை முதல் ரௌத்திரி மார்கழி முடிய

1980




ஆசிரியர் : சுவாமி தன்மயானந்தர்

துணை ஆசிரியர் : சுவாமி கமலாத்மானந்தர்

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்

ஸ்ரீராமகிருஷ்ண மடம் மயிலாப்பூர்

16, ராமகிருஷ்ண மடம் ரோடு சென்னை — 600 004

# பொருளடக்கம்

(அகர வரிசை)

ஆசிரியர்: சுவாமி தன்மயானந்தா. துணை ஆசிரியர்: சுவாமி கமலாத்மானந்தா
பதிப்பாளர்: சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004
அச்சிடுபவர்: K. L. செல்லப்பன், சுத்தானந்தா அச்சகம், சென்னை 600 020